# ஏன்
# ஜெபம்
# எப்படி

(Formerly titled The Reality of Prayer)

EDWARD M. BOUNDS, D.D.

BLESSING BOOKS
POST BAG 609, VELLORE 632 006.
INDIA

## ஆசிரியரைப் பற்றி...

ஆண்டவரும் இரட்சகருமாகிய தன் நேசர் இயேசுகிறிஸ்துவுக்கு எட்வர்ட் பவுண்ட்ஸ் தன்னை அசாதாரணமாக அர்ப்பணித்திருந்தார். துயிலும் வேளை தவிர்த்து எப்பொழுதும் ஜெபித்துக் கொண்டும், எழுதிக் கொண்டுமே இருந்தார்.

பவுண்ட்ஸுக்கு தேவன் பரந்த இதயத்தையும் அணையா ஊழிய பாரத்தையும் தந்தார். அது உன்னதத்திலிருந்து தோன்றியது என்பேன். இல்லையேல் பழையதும் புதியதுமான இவ்வளவு உயரிய செய்திகளை அவர் தந்திருக்க முடியாது.

பவுண்ட்ஸ் தியான வானத்திலே தோன்றிய ஓர் விடிவெள்ளி. அப்போஸ்தலருக்கு அடுத்து ஜெபவாழ்வில் அவ்வளவு ஆழம் சென்றவர் வேறு எவரும் இல்லை.

“நல்லது, உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்காரனே, ...என் எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிரவேசி” என்று ஆண்டவர் அவரிடம் சொன்ன நாள் வரை எழுதிக் கொண்டேயிருந்தார். 1911-13இல் நியூயார்க்கிலுள்ள தன் நண்பருக்கு, “தேவன் எனக்கு புதிய சிந்தனைகளையும், தரிசனங்களையும் தர ஜெபியுங்கள்” என்று எழுதியிருந்தார்.

ஜான் வெஸ்லி, பவுண்ட்ஸ் ஆகிய இருவரையும் ஒப்பிட்டுப் பார்ப்பது பயன் தரும்.

வெஸ்லி இனிமையும், பொறுமையான மனதுடையவர். பேச எழுந்து நின்றாலோ உள்ளங்களை உடைப்பார். அவரது செய்திகள் சாட்டையடி போலிருந்தன. பவுண்ட்ஸ் எளிமையும் தாழ்மையுமானவர். தன்னை எதிர்த்தோர்மீது எரிந்து விழுந்ததேயில்லை. அதிகாலையிலும் இரவிலும் அவர்களுக்காக அழுது ஜெபித்தார்.

வெஸ்லி ஓர் அப்பாவி. அவரது உடன் சகோதரர் சார்லஸ், ‘என் சகோதரன் பாட்டாளிகளுக்குத் தொண்டன்” என்றார். பவுண்ட்ஸ்

உள்ளங்களை உய்த்தறியும் திறமை படைத்தவர். எல்லா சீர்கேடுகளுக்கும் அப்பாற்பட்டவர். அவைகளில் தன் நேரத்தை வீணடிக்கவில்லை.

வெஸ்லி நாள் முழுவதும் குதிரைச் சவாரி செய்துகொண்டு பிரசங்கித்து வந்தார். பவுண்ட்ஸ் இரவும் பகலும் ஜெபித்துக் கொண்டும் எழுதிக் கொண்டுமிருந்தார்.

வெஸ்லி தனது இறுதி நாட்களிலும் தனது உபதேசங்கள் திரித்துக் கூறப்படுவதை பொறுக்க மாட்டார். பவுண்ட்ஸூம் அப்படியே.

வெஸ்லி உயிரோடிருக்கும்போதே உலகப்புகழெய்தினார். பவுண்ட்ஸ் 12 ஆண்டுகள் Christian Advocate என்ற பத்திரிகையின் ஆசிரியராயிருந்தும் அவரது சபைக்கு வெளியே அவரைத் தெரியாது.

வெஸ்லி 86 வயதில் தெருக்களில் அரைமணி நேரம் பிரசங்கித்தார். பவுண்ட்ஸ் 75 வயதில் அதிகாலையில் முழங்காலில் மூன்று மணி நேரம் ஜெபித்தார்.

வெஸ்லி மரிக்குமுன் தொடர்ந்து 56 ஆண்டுகள் கிறிஸ்தவ உலகில் முதன்மையான இடத்தைப் பிடித்திருந்தார். அந்நாட்களில் அவரை அறியாதவர் இல்லை. அவரது பிரசங்கம், அத்துடன் நிறுவன ஊழியத்தால் இங்கிலாந்து மறுபிறப்படைந்தது. ஆனால் 50 ஆண்டுகள் “யாரும் அறியாது சபையில் இரகசியமாக இருந்து வந்த” பவுண்ட்ஸ் அடுத்த 50 ஆண்டுகளில் அறியப்பட்டார்.

இளமைதொட்டு வெஸ்லியின் பரிசுத்தம், அறிவாற்றல், கீர்த்தி ஒரு பெரிய நதிபோல பிரவாகித்து ஓடியது. ஆனால் இதுவரை அணையால் தடுக்கப்பட்டிருந்த பவுண்ட்ஸின் புகழ் இப்பொழுது மிகுந்த வீரியத்துடன் வெளிப்பட்டு ஓடத் தொடங்கியுள்ளது. அது சீக்கிரத்தில் அது தியான உலகின் “அமேஸான்” நதியாக மாறும்.

தன் இறுதிக் காலத்தில் வெஸ்லி ஓரிடத்தில் பிரசங்கித்ததைப் பற்றி ஒருவர் தன் குறிப்பேட்டில் இப்படி எழுதியுள்ளார்: “மேடையில் இருபக்கமும் ஊழியர் அவரைத் தாங்கி நின்றனர். பேச்சு தெளிவாக

கேட்கவில்லை. ஆனால் அவரது கெம்பீரத்தோற்றம் மறக்க முடியாதது."
1912 இல் பவுண்ட்ஸ் மரிப்பதற்கு 10 மாதத்திதற்கு முன் ஓர் ஆலயத்தில் பேசினார். அவரது சத்தம் தெளிவாக இல்லை. சிந்தனைகள் கோர்வையாக இல்லை. 20 நிமிடங்களே பேசிய அவர் முடிக்கும் தருவாயில் முழுவதும் சோர்ந்து விட்டார்.

வெஸ்லிக்கு என்றுமே பணப்பிரச்சினை இருந்ததில்லை. பவுண்ட்ஸ் பணத்தைப் பற்றி நினைக்கவேயில்லை. அது தேவையில்லை என்றும் சொல்லவில்லை.

"தேவன் நம்மோடிருக்கிறார். இதுவே காரியம்" என்று வெஸ்லி பிரகாசமான கண்களுடனும், உரத்த சத்தத்துடனும் கூறி மரித்தார். "அவர் ஆயத்தமானால் நானும் ஆயத்தம். பரலோக ஆனந்தத்தை ருசிக்க ஆவலாயிருக்கிறேன்" என்று பவுண்ட்ஸ் இறுதியில் தன் நண்பருக்கு எழுதினார். "உலகமே என் பேராயம்" என்றார் வெஸ்லி. அகிலமே தனது எல்லையென பவுண்ட்ஸ் ஜெபித்தார்.

பரமசிந்தையின் திருவுருவாயும், கண்ணியத்தின் உறைவிடமுமா யிருந்தார் வெஸ்லி. விண்ணக உருவாயும், தாழ்மை சுயவெறுப்பின் தாபரமாயுமிருந்தார் பவுண்ட்ஸ். பரிசுத்தவான்களின் இதயத்தில் வெஸ்லி என்றும் வாழ்வார், பவுண்ட்ஸ் நித்தியமாய் நிலைத்திருப்பார்.

வெஸ்லி பளிங்குக் கற்களால் மூடி வாசகங்கள் எழுதப்பட்ட கல்லறையில் உயிர்த்தெழுதலை எதிர்நோக்கி உறங்குகிறார். பவுண்ட்ஸ் சாதா கல்லறையில் மணவாளன் வரவை எதிர்நோக்கித் தூங்குகிறார்.

இவ்விரு தேவ மனிதரும் தெளிந்த சிந்தை, சீரிய நோக்குகளுடன் பிறர்க்கு எட்டாத உயரத்தில் வாழ்ந்தனர். இந்த இனம் இன்று இவ்வுலகில் இல்லையோ? ஜெபிப்போம்!

***- Homer W. Hodge***

# பொருளடக்கம்

# 1

# ஜெபத்தின் மேன்மை

இறைவனோடு இடைப்படுதலே ஜெபம். அது தியான வாழ்வின் சிகரம். இறைவனோடு இரண்டறக் கலப்பதாம். அதுவே இறைவனை ருசிக்கும் அனுபவம்.

தேவையொன்று அளவுக்கு மீறி நம்மை அழுத்துகையில் இதய ஆழத்திலிருந்த எழும் கதறலே "விண்ணப்பம்". அதுவே ஜெபத்தின் இதயம்.

விடாப்பிடியாக வேண்டுவதே "மன்றாட்டு". அது குழந்தையின் பற்றுறுதியோடும், நம்பிக்கையோடும், இறைமகனோடு இணைந்து பிறருக்காகப் "பரிந்துரைத்தல்".

தந்தையிடம் "பேசுவதே" ஜெபம். அப்பா, பிதாவே என்று அழைக்க ஆண்டவர் நமக்குக் கற்றுத் தந்தார். லாசருவின் கல்லறையில் கிறிஸ்து தம் தந்தையையே நோக்கினார். தம் சீடருக்காக அவரிடமே வேண்டினார். கிறிஸ்துவின் எல்லா ஜெபங்களிலும் குழந்தையின் உறுதியையும், உருக்கத்தையும், கண்ணீரையும் காண்கிறோம். "அவர் மாம்சத்திலிருந்த நாட்களில் தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும் விண்ணப்பம் பண்ணி, வேண்டுதல் செய்தார்" (எபி 5:7)

“கேட்பதும், பெறுவதும்” ஜெபம். “உங்களில் ஒருவன் ஞானத்தில் குறைவுள்ளவனாயிருந்தால் யாவருக்கும் சம்பூரணமாய்க் கொடுக்கிறவரும் ஒருவரையும் கடிந்து கொள்ளாதவருமாகிய தேவனிடத்தில் கேட்கக்கடவன், அப்பொழுது அவனுக்குக் கொடுக்கப்படும்” (யாக் 1:5). “நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படி கேட்டால் அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்பதே அவரைப்பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியம்” (1யோ 5:14).

ஜெபத்தைக் குறித்த இறைவனின் விருப்பம் என்ன? ஜெபிப்பதே! “மனிதர் சோர்ந்து போகாமல் எப்பொழுதும் ஜெபம் பண்ண வேண்டும்” என்று இயேசு கிறிஸ்து ஓர் உவமையைச் சொன்னார் (லூக் 18:1). “நான் பிரதானமாய்ச் சொல்லுகிற புத்தியென்னவெனில் எல்லா மனிதருக்காகவும் விண்ணப்பங்களையும் ஜெபங்களையும் வேண்டுதல் களையும் ஸ்தோத்திரங்களையும் பண்ண வேண்டும்” (1 தீமோ 2:1)

“உறுதியாக”, “இடைவிடாமல்” “ஸ்தோத்திரத்துடன்” “விழித்திருந்து”, “சோர்ந்துபோகாமல்” ஜெபிக்கவேண்டும்.

இறைவனின் விருப்பப்படியே ஜெபிக்கிறேன் என்று அறிவதெப்படி? இறைவனின் விருப்பமே நம்மை ஜெபிக்கத் தூண்டுகிறது. அவரது விருப்பம் வசனிப்பல்ல, கீழ்ப்படிதலே. கட்டளைக்குக் கீழ்ப்படிந்து ஜெபித்தால் அவரது விருப்பப்படியே ஜெபிக்கிறோம் என்பதில் ஐயமில்லை.

ஜெபம் தன்னலமற்றது. சுயத்திற்கு அதில் இடமில்லை. மிகச் சிறிய வேண்டுதலும் இறைவனின் இதயத்தில் தோன்றி நம்மை மாற்றி, பிறரை நன்மையால் நிரப்புகிறது.

ஜெபம் சகோதர அன்பின் மையம். மனிதர்மேல் பிரியமே ஜெப வாழ்வின் அறிகுறி. அன்பில்லையேல் ஜெபமில்லை. சகோதரனோடு ஒப்புரவாகாமல் இறைவனை நெருங்க முடியாது.

“நீ பலிபீடத்தினிடத்தில் உன் காணிக்கையைச் செலுத்த வந்து உன் பேரில் உன் சகோதரனுக்குக் குறை உண்டென்று அங்கே நினைவு கூருவாயாகில் அங்கேதானே பலிபீடத்தின் முன் உன் காணிக்கையை

வைத்துவிட்டுப் போய், முன்பு உன் சகோதரனோடே ஒப்புரவாகி பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்து" (மத் 5:23).

ஜெபமே இறையரசை இயக்கும் இயந்திரம். அது இறையன்பின் ஆணிவேர். எனவே ஜெபமின்மையைப் போல் தீமை வேறெதுவுமில்லை.

கிறிஸ்து ஜெபத்தை உருவாக்கவில்லை. அதற்கு உயிர்கொடுத்தார். மலைப்பிரசங்கத்தின் நூற்றுப்பதினொரு வசனங்களில் ஜெபத்துக்கடுத்த மூன்று அடிப்படை உண்மைகளும், பதினெட்டு நடைமுறை சத்தியங்களும், பிற மறைமுகப் பாடங்களும் உண்டு. இதிலிருந்து ஆண்டவர் ஜெபத்திற்கு தரும் இடத்தை அறிகிறோம்.

மன்றாட்டு வீரன் மோசேயின் வாழ்க்கைச் சிகரம் ஜெபமே. இறைவனோடு இரண்டறக் கலந்துவிட்டதால் அவன் ஜெபத்தை மறக்கவில்லை. மாறாக ஜெபத்தில் தன்னையே மறந்துவிட்டான். அதன் மேன்மையை அறிந்தவன் அவன்! இஸ்ரவேலரை அழிவு நெருங்கி வந்தபோது "கர்த்தருக்கு முன்பாக நாற்பது நாள் இரவு பகலாக முகங்குப்புற" விழுந்து கிடந்தான். அற்புதமாய் ஜெபித்தான், அதிசயம் கண்டான்!

இறைநூல் நம்மில் பிரதானமாய் எதிர்பார்ப்பது ஜெபமே. இறைவன் நமக்குச் செவிகொடுக்கிறார் என்பதே அதன் மையப் பொருள். ஜெபம் எதையும் சாதிக்கும் என்பதே வேத விளக்கம்.

இறைவனின் ஆசையெல்லாம் ஜெபத்தின் அருமையை நாம் அறியவேண்டுமென்பதே. எனவே இறைமகன் இயேசுவும் அடுத்தடுத்து ஜெபத்தைக் குறித்தே உரையாடினார். ஜெபிக்க வேண்டுமென்று வலியுறுத்தினார்.

ஜெபமே நமது முக்கிய தொழில். அதைச் செவ்வனே செய்து முடிப்போம். வாய்ப்புகள் எதையும் நழுவ விட வேண்டாம். எதிரியை முறியடிக்கும் ஒரே ஆயுதம் ஜெபமே. ஜெபத்தில் அவனை வென்றிடுவோம்.

ஜெபமே இறையரசிற்கு அடித்தளம். அதுவே அதனை உயர்த்திக் கட்டும் சாரம். மனிதர் இறையரசிற்காக எப்பொழுதும் ஜெபிக்க வேண்டும்.

“அறுப்புக்கு எஜமான் தமது அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படிக்கு அவரை வேண்டிக் கொள்ளுங்கள்” (மத் 9:38)

இறைவனின் ஒத்தாசையைப் பெற ஒரே நிபந்தனை ஜெபம். அவர் ஒத்தாசையின்றி நம்மால் என்ன செய்ய முடியும்? ஜெபமே இறைவன் நமக்குக் கையளித்த காசோலை, நன்மைகளை நகர்த்தி வரும் நீரோடை.

ஓரத்திலல்ல, ஜெபத்தின் மையத்துக்குள் மனிதன் வந்துவிட வேண்டும். அவனது ஆன்மீகம் அங்குதான் செயல்பட முடியும். அதுவே அவனை ஒளிமயமாக்குகிறது. அவனது ஞான ஊற்றும் அதுவே.

உணர்ச்சியூட்டும் சித்திரமல்ல அது. அழகோ அலங்காரமோ அதற்கு இல்லை. காதுக்கினிய கவியோ, மனதை மயக்கும் மெட்டோ அதற்கில்லை. விண்ணகத்தில் தூயாதி தூயவரின் இதயத்தில் உருவான ஜெபம், மானிடருக்கு மேன்மையையும் நன்மையையும் சொரிகிறது.



# 2

# ஜெபம் நமது செல்வம்

ஜெபத்தைக் குறித்த சிறந்த நூல்கள் பலவுண்டு. ஜெபம் பிரதானமாக நம்மை மாற்றும் பயிற்சிப் பள்ளி. தாழ்மை பொறுமையினைக் கற்றுத் தரும் கடின ஆசான் என்பது இன்றையக் கருத்து. இது கேட்க இனிதாயிருந்தும் வேதத்தில் தெளிவாகக் கூறப்படாத ஒன்று. கேட்டுப் பெற்றுக் கொள்வதே ஜெபம். கேட்டதைக் கொடுக்கும் தந்தையே தேவன். அவர் ஜெபத்திற்குப் பதிலளிக்கிறார் என வேதம் தெளிவாகக் கூறுகிறது. எனவே பதில்பெறும் ஜெபமே பயனுள்ள ஜெபம்!

ஜெபத்தின் தேவை, நற்செய்தி நூல்களில் பெரிதும் வற்புறுத்தப்பட்டுள்ளது. ஜெபமே பிதா சுதன் உறவுக்கும், உடன்படிக்கைக்கும் அடித்தளம். நற்செயதியை நகர்த்துவது ஜெபமே. எதிரியை முறியடித்து, வாக்குத் தத்த பூமியை சுதந்தரிக்க ஜெபத்தையன்றி வேறு வழியில்லை.

இவையனைத்தும் கேட்டுக் கேட்டு புளித்துப் போயிருந்தாலும் இவை மாறாத எளிய வேத உண்மைகள். இவைகளை வலியுறுத்தித் துல்லியமாகக் கூறும் காலம் இதுவே. ஏனெனில் மனித சித்தாந்த தத்துவங்களும், பழக்கவழக்கங்களும் வேதத்தின் எளிய உண்மைகளைப் புதைத்துவிடுகின்றன.

வேலை மிகுதி வேண்டுதல் குறைவு என்பதே இன்றைய நிலை, முழங்காலில் நின்றாலும் சிந்தை ஜெபத்திலில்லை. தலைவணங்கி நின்றாலும் குலை தேவனிடத்திலில்லை. வெளியே ஜெபப்பாவனை இருந்தாலும் உள்ளே ஜெபமில்லை. முறை இருந்தாலும் ஆவி இல்லை. ஆனால் ஜெபமோ முழுமனதோடு ஈடுபடவேண்டிய முக்கியப்பணி. சேவையின் மையயே ஜெபமாயிருக்கவேண்டும்.

ஜெபத்தில் வரையறையும் வழிமுறையும் வேதமெங்கிலும் வரையப்பட்டுள்ளன. பிரபல ஜெப விரிவுரையாளரைவிட ஜெப வீரரே மேல்! உடனடித் தேவை அதுவே! இது இறையியல் கல்லூரிகளில் கற்பிக்கப்படுவதால், நெஞ்சத்தின் ஆழத்திலிருந்து பொங்கித்துடிப்பது. வெறும் வசனிப்பல்ல, அது உணர்ச்சிகளின் ஊற்று. ஜெபிக்கையில்தானே ஜெபத்தை அதிகம் கற்கிறோம். ஜெபத்தின் தன்மையை அறிய வேண்டுமா? ஜெபியுங்கள்!

மந்திர முணுமுணுப்போ, சுந்தர அடுக்குமொழி அலங்காரமோ, வேறெந்த சடங்கோ ஜெபமல்ல. மனச்சாட்சியை மழுங்கவைக்கும் மாற்று மருந்தல்ல ஜெபம். அது நம் சிலாக்கியம். ஆற்றவேண்டிய உன்னதப்பணி. அதுவே அனைவரும் எந்நேரமும் செய்ய தேவன் விரும்பும் ஊழியம், அவருக்கு உகந்த சுகந்தவர்க்கம்.

பிள்ளைகளின் தேவைகளை அறிந்து, அவற்றை நிறைவு செய்கிற, விருப்பங்களைக் கண்டு உணர்ந்து நிறைவேற்றுகிற தந்தையினிடத்தில், இயல்பாக பிள்ளையைப்போல கேட்பதே ஜெபம். நம் தேவைகளைத் தருவதில் அவரும் பெருமகிழ்ச்சியடைகிறார். ஜெபம் தந்தையைக் கூப்பிடும் குழந்தையின் குரல். அது தந்தை கேட்டு மகிழும் மழலை மொழி. வேறெந்த வழியிலும் பெற்றிட முடியா தேவ ஈவுகளைத் தேடுவதே ஜெபம்.

உறுதியோடும், நம்பிக்கையோடும் தேவைக்காக தேவனைத் தேடுவதே ஜெபம். கேட்டவைகளை அருளுவது அவர் நீதி. வேண்டுவதற்கும் நினைப்பதற்கும் மிகவும் அதிகமாக அருளிச்செய்பவர்

அவர். ஆவியின் கனிகளை அவர் ஈவாக அளிக்கிறார். ஏனெனில் அவர் பதிலளிக்கும் பரம தந்தை.

நாம் கேட்டதைக் கொடுப்பார் என்பதே வேத வாக்கு. நமக்கு பாடங்கற்பிக்க, ஒரு வேளை வேறொன்றைக் கொடுப்பார் என்பது விதிவிலக்கேயன்றி வேத நியதியல்ல. அப்பத்தைக் கேட்டால் அப்பத்தையே கொடுப்பார்!

ஜெபம் தருவது மேலான தத்துவங்களோ சத்தச்சரங்களோ அல்ல; அது சீரிய உறவையும், அரிய குறிக்கோள்களையும், உயர் பணிகளையும் உவந்தளிக்கும். அதை மனதில் வரையறுத்து அனுபவத்தில் வரைய வேண்டும். ஜெபத்தை வரையறுக்கவோ விளக்கவோ பவுலும் அதிகம் முனையவில்லை. முற்பிதாக்களும், தீர்க்கர்களும் நன்கு பயிற்சித்த, பயிற்றுவித்த ஒன்றையே மீண்டும் விரித்துரைப்பது ஏன் எனக் கருதியிருக்கலாம். ஜெபத்திற்கு முன்மாதிரியும் வரையறையும் கிறிஸ்துவே. எவரும் அவர்போல் ஜெபித்ததில்லை. ஆம், மேன்மையான மன்றாட்டுக்கு மேன்மையான பதில்களே! இதுவே அவர் வாழ்வின் சிகரம். தம்மையே வெளிப்படுத்தி பவுலுக்கு ஜெபிக்கக் கற்றுக் கொடுத்தார். அதுவே ஜெப அழைப்பும் அரிச்சுவடியும், தெய்வீக அன்பைப் போலவே, ஜெபமும் மேன்மையானது, மகிமையானது, மாட்சிமிகுந்தது. குளிர்ந்து குறைந்து, மரத்துப்போன உலக ஞானத்திற்கு அது ஒவ்வாது. வெறும் வார்த்தைகளில் அடக்க முடியாதது. உள்ளத்திற்கும் உன்னத தேவனுக்கும் மட்டுமே அது புரியும்!

தொல்லைகளைத் தவிர்க்கும் மனிதனின் கண்டுபிடிப்பு அல்ல ஜெபம். அரங்கேற்றும் மேடைச் சொற்பொழிவுமல்ல அது. மனிதருக்கு உயிர் தந்து உவகையளிக்கும் இறைவனின் ஈவு. அது உன்னதருடனுள்ள உறவு. ஜெபத்தில்தான் தேவன் மனிதனின் தேவையை சந்திக்கிறார்; அவனை ஆசியினால் அபிஷேகிக்கிறார். அவனுக்கு உதவிக்கரம் நீட்டுகிறார். . ஜெபம் மனித மனத்தின் வெற்றிடத்தை தேவப்பிரசன்னத்தால் நிறைக்கிறது. மனித வறுமையை

தேவ வளமையினால் பூர்த்தி செய்கிறது. மனித பலமின்மைக்குப் பதில் தேவபலத்தைத் தருகிறது. மனித மடமையை தேவ மகத்துவத்தால் மூடுகிறது. தரித்திரத்தைப் பரலோகப் பரவசத்தால் பாடச் செய்கிறது.

நமக்கிருக்கும் இந்த ஜெப அழைப்புத்தான் எத்தனை மேலானது? அது குழந்தைகளின் கண்ணாமூச்சி விளையாட்டல்ல. அது கருத்தாழமிக்க கடினமான, தெய்வீகப்பணி, கண்டிப்பாக அனைத்துக் கிறிஸ்தவரும் ஈடுபட வேண்டிய தொழில். ஜெபம் மனிதனை மண்ணுக்கடுத்த மாயமான வேலையிலிருந்து விடுதலை செய்து, மறுமைக்கடுத்த திருமறைப் பணிகளில் மனதை லயிக்கச் செய்கிறது. ஜெப வேளையைப் போல் மற்றெவ்வேளையிலும் மனிதன் பரத்திற்கும் பரமனுக்கும் அவ்வளவு அருகிலிருப்பதில்லை. ஆண்டவரைப் போலாவதும், அவரோடு இணைந்திருப்பதம் அவ்வேளையில்தான். ஆண்டவர் மீது அன்பு, பிறரைநேசிக்கும் பண்பு, தூய வாழ்வின் மாண்பு இவையனைத்தும் உருவாவதும் முதிர்ச்சியடைவதும் ஜெபத்தில்தான்.

கடமையுணர்வால் உண்டாவதல்ல ஜெபம். அது இரட்சிப்பின் கனி. ஜெபிக்காதவருக்கு மீட்பு ஏது? ஜெபத்தில் நாட்டமும் தேட்டமும் தோன்றுவது இரட்சிப்பின் விளைவே. பரமன் மீது பாசங்காட்டி ஜெபியாதிருப்பது சாத்தியமோ? தூய ஆவியைப் பெற்றவர் ஜெப ஆவி இல்லாதிருப்பது எப்படி? மறுபடியும் பிறந்தவர் ஜெபவாழ்வில் மலராதிருக்க முடியுமா? ஆவியானவரைப் பெற்றுக் கொள்ளும் போது ஜெப ஆவியையும் பெற்றிடவில்லையா? சகோதர சிநேகம் ஜெபத்தில் பயிற்றுவிக்கப்படவில்லையெனில் அதைப் பயிற்சிப்பது எப்படி?

ஜெபத்தின் இருவகைகள் புதிய ஏற்பாட்டிலுண்டு – ஜெபமும் விண்ணப்பமும். ஜெபமென்பது பொதுவாகக் கேட்பது, விண்ணப்பமோ சிறப்பாக மன்றாடுவது. ஜெபமும் விண்ணப்பமும் என்றுமே இணைந்திருக்கின்றன. இனிமையான பக்திப் பரவசமூட்டும் தியானத்திற்குப் பின், தேவைகளை விண்ணப்பத்தின் மூலம் தேவனுக்குத் தெரிவிக்கிறோம்.

போர்க்கள சிந்தை ஜெபத்திலிருக்க வேண்டுமென பவுல் எபேசியருக்கு எழுதுகிறான் (எபே6). அதற்கு விடாப்பிடியான விண்ணப்பத்தின் மூலம் தூய ஆவியானவரின் ஒத்தாசையைத் தேட வேண்டும். நமது விண்ணப்பங்கள் விண்ணக வல்லமையால் நிறைந்து வழிய வேண்டும். தெளிந்த புத்தி இவ்வித தீவிரப் போராட்டத்திற்குத் திடமளிக்கும். விடாமுயற்சியுடன் விண்ணப்பத்தில் தரித்திருத்தல் வெற்றியைத் தரும். இப்போரில் நாம் வெற்றி வாகை சூடி முன்னேற ஜெபம் மிக அவசியம். இன்றைக்கும் அப்போஸ்தலர் கால திடமும், தீவிர ஆற்றலும் வேண்டுமெனில் ஜெபமே வழி!

மெய்யான மேலான தரிசனமுடையவர்களே ஜெபிக்க முடியும். வெளி 4:6 "நான்கு ஜீவன்கள்" "முற்புறத்திலும் பிற்புறத்திலும் கண்களால் நிறைந்திருந்தன என்றெழுதப்பட்டுள்ளது. கண்கள் எதற்கு? காண்பதற்கு! தெளிவும் தீர்க்கமும் தீவிரமும் அதிலுண்டு. பார்வையிருந்தால் விழிப்புணர்வும், ஆழமான உள்நோக்கும் உண்டு. ஜெபத்தினால் மட்டுமே மனக்கண்கள் திறக்கும். கிருபையின் இரகசியத்தைக் குறித்து தெளிவான, ஆழமான அறிவுரை பெறுவது ஜெபத்தில்தான். இந்தநான்கு ஜீவன்கள் "கண்களால் நிறைந்திருந்தன". அது அவற்றின் மதிநுட்பத்தைக் காண்பிக்கிறது. வாழ்வின் மேன்மை மதிநுட்பமே. ஆனால் அறிவின்மையோ மற்ற அனைத்தையும்போல ஆவிக்குரியவற்றிலும் தரம் குறைந்தது. தேவனைக் காணும் கண்களைத் தருவது ஜெபம்! தேவனைக் காண்பதே ஜெபம்! ஜெப வாழ்வென்பது உள்ளும் புறமும் மதி நுட்பத்தால் நிறைந்திருத்தல். எப்போதும் எல்லா விழிப்புணர்வோடிருக்கும் உள்ளில் ஒளியில்லையெனில் உண்மையாக ஜெபிக்க முடியாது. நம் உள்ளான நிலையினை ஆராய்ந்து பார்ப்போமா?

ஜெபமில்லையேல் ஊழியமில்லை. ஜெபமே மேன்மையான மதிநுட்பமும், ஆழமான ஞானமும், உயிராற்றலும், மிகுந்த மகிழ்ச்சியைத் தரக்கடியதும், உன்னத பயனுள்ளதும், எல்லாவற்றிலும் வல்லமையுடையதுமாயிருக்கிறது. ஜீவனாயும், ஒளியாயும், அழியா வாழ்வினை அளிப்பதாயுமிருக்கிறது. உலர்ந்த, குளிர்ந்த, இறந்த ஜெபங்களை இனிமேல் விட்டொழிப்போம்! பயின்ற, அறிவற்ற

சிறுபிள்ளைத்தனங்களைத் தவிர்ப்போம். தலைமைப் பணியாம் மன்றாட்டில் முற்படுவோம். முழுமூச்சுடன் பாடுபடுவோம். முழுத்திறனுடன் முன்னேறுவோம். மாபெரும் ஜெபப் பணியில் தேர்ச்சியடைவோம். கைதேர்ந்த ஜெபக்கலைக் சிற்பிகளாவோம். ஜெப ஆவியில் நிறைந்து நனைந்து ஆராதனையில் ஆனந்தித்து, ஆழ்ந்து, ஆவியில் அனல் கொள்வதின் மூலம் ஆசீர் மழை பெய்யும். பிறரும் ஆசீர் பெறுவர். ஜெபத்தினால் வேதாளத்துடன் போரிட்டு பாதாளத்தைக் கொள்ளையிட்டு, பரத்தை நிரப்புவோம்; பாரைப் பாமரனுக்குப் பரிசளிப்போம்.

இன்று பலர் ஜெபத்தைப் புறக்கணிப்பது வருத்தமளிக்கிறது. அது பேரிழிவை உண்டுபண்ணும். பார்வைக்காக, சடங்காச்சாரமாக, இலக்கின்றி ஏறெடுக்கும் ஜெபத்தினால் இழப்பு ஏராளம். உயிரற்ற படிவ ஜெபங்களை, அனலின்றி, கிறிஸ்தவர் உளறுவது பரிதாபத்திற்குரியது. இன்று இந்நோய் அநேகரைப் பிடித்துள்ளது.

தன்னை மாய்மாலக்காரி, மதுபானக்காரி என்று குற்றஞ்சாட்டிய ஏலிக்கு அன்னாள் அளித்த பதில், "நான் கர்த்தருடைய சந்நிதியில் என் இருதயத்தை ஊற்றிவிட்டேன்" என்பதே (1 சாமு 1:15). இறைவன் இஸ்ரவேலருக்களித்த வாக்கு; இதோ "நீங்கள் கூடிவந்து, என்னைத் தொழுதுகொண்டு, என்னை நோக்கி விண்ணப்பம் பண்ணுவீர்கள்; நான் உங்களுக்குச் செவிகொடுப்பேன். உங்கள் முழு இருதயத்தோடும் என்னைத் தேடினீர்களானால் என்னைத் தேடுகையில் கண்டுபிடிப்பீர்கள்" (எரே29:12.13). "இறைவன்முன் இதயத்தை ஊற்றிவிடுதல்", "முழு இருதயத்தோடு தேடுதல்" என்ற வார்த்தைகளோடு நமது இன்றைய ஜெபத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், நம்முடையவை வெறும் வெத்துவேட்டும், வீணும், வினையற்றதுமாயிருப்பது தெரியவரும். எலியா "கருத்தாய் ஜெபம் பண்ணினான்" என யாக்கோபு சாட்சியிடுகிறான் (யாக் 5:17)

பவுல் தீமோத்தேயுவிற்குக் கொடுத்த ஜெபப் பாடங்களில் பல்வேறுவகை ஜெபங்களைக் குறிப்பிட்டான் (1 தீமோ 2:1). அவை யாவும் பன்மையில் சொல்லப்பட்டுள்ளன - விண்ணப்பங்கள், ஜெபங்கள்,

வேண்டுதல்கள். இவை ஜெபத்தின் பல்வேறு வகையினையும், அதின் முடிவில்லா வேறுபாடுகளையும் கூறுகின்றன. கருத்தாழமற்ற கட்டுரை ஜெபங்களை விட்டொழித்து, ஜெபத்தின் சிகரத்தை எட்டும்வரை விண்ணப்பத்தையும், மன்றாட்டையும் அதிகரிக்க வேண்டுமென வலியுறுத்துகிறது. இயக்கம், உணர்வு, கடமை, பணி இவைகளின் கூட்டுதான் ஜெபம்.

பரலோகத்தொழுகையில் விண்ணப்பமிருக்காது. அதில் துதி பாடும் மகத்துவப் புகழ்ப்பாட்டுக்கள்தான் உண்டு. அதனைப் பயிற்சிக்கும் இப்பூலோகத் தொழுகைக்கு உயிரூட்டுவது ஜெபமே!



# 3

# ஜெபம் நமது சேவை

இறைவன் தங்கள் தந்தை என்பதை இஸ்ரவேலர் முழுமையாய் அறியவில்லை. அவ்வரிய உண்மை அவ்வப்போது சிறிதளவில் வெளிப்பட்டது. இவ்வுயர் கோட்பாட்டின் மீதே ஜெபத்தின் உறுதியான, ஆழமான அடித்தளத்தை நிலைநாட்டினார் கிறிஸ்து. ஜெபத்தின் உருவமும், ஜெபிப்பதின் உரிமையும் இவ்வுண்மையினையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. "எங்கள் பிதாவே" என்றழைக்கும் இதயக்கனிவு நம்மை தேவனருகில் இழுத்துச் செல்கிறது. ஜெபம் தந்தையைப் பிள்ளை அணுகுமுறை; பிள்ளையின் மழலைமொழி; பிறப்புரிமை. கண்களை ஏறெடுத்து "பரத்திலிருக்கிற எங்கள்பிதாவே" என்றழைப்பதே ஜெபத்தின் நியதி. தந்தையின் இருப்பிடமே நமது இல்லம். இல்லத்தை குறித்த ஏக்கமும், பிரிவுத் துயரும் ஜெபத்தில் இழைந்தோடும், வறண்ட இகத்திலிருந்து வளமான பரத்திற்கு அனுப்பப்படும் முறையீடே ஜெபம். குழந்தைக்குரிய ஏக்கத்தோடும், எதிர்பார்ப்போடும், அசையா நம்பிக்கையோடும், பரத்தை நோக்குவதே ஜெபம். பயபக்தியோடு, உதடுகளின் அசைவில் உன்னதரை உயர்த்துவது ஜெபத்தின் பாங்கான அங்கம்.

மற்றவரை மீட்புக்குள் நடத்த அவர்களுக்கு ஜெபத்தின் சிறப்பைக் குறித்து கற்பிப்பது அவசியம். பரலோகமும், நரலோகமும் உண்டென்றும், நரகத்தைத் தவிர்த்து பரத்திற்குப் போகவேண்டுமென்றும் கற்பித்தால் போதுமென்ற எண்ணம் தகாதது. பிறரை மீட்பிற்குள் நடத்தும் எளிய

வழிமுறைகளை அறியாததே அதற்குக் காரணம். உள்ளத்தினின்று உயர்த்தப்படும் எளிய ஜெபமே பரத்திற்கு வழி. பரம தகப்பனிடம் படைக்கப்படும் எளிய நேர்மையான ஜெபமேயன்றி, கல்வியறிவினாலும், கற்பனைத்திறனாலும் செய்யப்படும் போலி ஜெபங்களாலும் மீட்படைய முடியாது.

ஆவியின் எளிமை நம்மை உண்மையாய் ஜெபிக்கத் தூண்டும். "ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது" (மத் 5:3). "எளிமையுள்ளவர்" என்றால் ஏழை, பிச்சையெடுத்து உயிர் வாழ்வர் என்று பொருள். "கேட்டு"ப் பெற்றுக்கொண்டால்தான் நாம் உயிர் வாழ முடியும். ஜெபமே கிறிஸ்தவனின் நாடித்துடிப்பு. அவனது பிறப்புரிமையும், அன்றாட ஆகாரமும் அதுவே.

ஜெபத்தின் சிறப்பையும், அவசியத்தையும் கிறிஸ்து தாம் பிரசங்கித்தபோதெல்லாம் தெளிவுபடுத்தினார். தேவப்பணியில் ஈடுபடுமுன் ஜெபித்தேயாக வேண்டும் என்பதை எங்கும் பறை சாற்றினார். ஜெபிக்க ஜெபிக்க இறைவன் மீது அன்பும், இறைப் பணியில் ஈடுபாடும் கூடும் என்பதற்கு கிறிஸ்துவே முன்மாதிரி அவர் ஆவியானவரால் அபிஷேகிக்கப்பட்டு அனலாய் ஜெபித்தார். தூய ஆவியால் எவ்வளவு அதிகமாக நிரப்பப்படுகிறோமோ அவ்வளவுக்கதிகமாக ஜெப சிந்தையுள்ளவர்களாயுமிருப்போம். அங்ஙனமே ஜெபத்தில் எவ்வளவாய் தரித்திருக்கிறோமோ அவ்வளவாய் தேவ ஆவியிலும் நிறைந்திருப்போம்.

இயேசுவின் வாழ்வில், ஊழியத்தின் மகத்தான, மேன்மையான வேளைகளில் அவரை ஜெபிக்கிறவராகவே காண்கிறோம். திரு முழுக்கு பெறுகைகில் ஜெபித்து தூய ஆவியைப் பெற்றார்; ஊழியத் துவக்கத்தில் நாற்பது நாள் உபவாசித்து ஜெபித்தார்; ஜெபித்து சீடரைத் தெரிந்தெடுத்தார்; மறுரூப மலையில், கெத்செமனே தோட்டத்தில், ஏன் சிலுவையிலும் அவர் ஜெப வீரர்தான்! தமது அடிச்சுவடுகளைத் தொடர்ந்து வரும்படி நமக்கு மாதிரியை வைத்துப் போனார் (1 பேது 2:21).

அவர் செய்த அற்புதங்களில் சில முக்கிய ஜெபக் கோட்பாடுகளைக் காணமுடியும். நம் ஜெபங்களுக்கு சரியான பதில் எல்லா நேரத்திலும்

கிடைப்பதில்லை. மாறாக படிப்படியாக பதில் கிடைக்கிறது. நாம் கவனியாமல் விட்டுவிட்ட முக்கிய உண்மையை மாற்கு 8:23 வெளிப்படுத்துகிறது. "அவர் குருடனுடைய கையைப் பிடித்து, அவனைக் கிராமத்திற்கு வெளியே அழைத்துக் கொண்டு போய், அவன் கண்களில் உமிழ்ந்து..."

முழுமையாய் நம் கவனத்தை ஈர்க்கவும், நம்மோடு பேசவும் நம் வாழ்வில் இரண்டறக் கலக்கவும் இறைவன் அவ்வப்போது நம்மைத் தனிமையாக்குகிறார். நமதாண்டவன், குருடரை குணமாக்கிய மூன்று இடங்களும் ஜெபத்திற்கு அவர் பதிலளிக்கும் தன்மையையம், முறைகளையும், அவர் தம் இறையாண்மையில் எப்படியெல்லாம் செயல்பட முடியும் என்பதையும் அற்புதமாய் அறிவிக்கின்றன.

முதலில் எருசலேமில் குருடனிடம் தற்செயலாய் வந்த கிறிஸ்து, தரையிலே உமிழ்ந்து, சேறுண்டாக்கி, அவன் கண்களில் பூசி சீலோவாம் குளத்தில் கழுவும் படி கட்டளையிட்டார். அற்புதம் கீழ்ப்படிதலில்தான்; கழுவ வேண்டும் சீலோவாம் குளத்தில்! கீழ்ப்படிய மறுத்தால் இழப்பு நமக்குத்தான்! இக்குருடனை குணமாக்கும்படி ஒருவரும் வேண்டவில்லை, ஏன் அந்தக் குருடனே வேண்டவில்லை! (யோ 9:1-7).

அடுத்ததில், குருடனைக் கிறிஸ்துவினிடத்தில் கட்டிக் கொண்டு வந்தவர்கள், அவனைக் குணமாக்க அவரிடத்தில் மன்றாடினர். அவருடைய தொடுதலே அவனைக் குணமாக்குமென்று நம்பினர். ஆனால் அவரோ அவன் கையைப் பிடித்து ஊருக்கு வெளியில் யாருமற்ற இடத்திற்கு அழைத்துச் சென்றார். தனிமையில் மறைமுகமாக அந்த அற்புதம் செய்யப்பட வேண்டியதாயிருந்தது. அவனுடைய கண்களில் உமிழ்ந்து தன் கைகளால் தொட்டார். கிருபையின் முதல் தொடுதல் பாதிப் பார்வையைத் தந்தது. இரண்டாம் தொடுதலில் பூரணப் பார்வை! கிறிஸ்து தன்னை தனிமைக்கு நடத்த ஒப்புக் கொடுத்ததே, பார்வையைத் திரும்பப் பெறச் செய்தது (மாற் 8:22 26).

மூன்றாவது, பர்திமேயுவைப் பற்றியது. நம்பிக்கையுடன் அவனெழுப்பிய கூக்குரல் அதிசயிக்கத்தக்கது. கிறிஸ்துவுடனிருந்த கூட்டத்தினரால் கடிந்து கொள்ளப்பட்டும், எதிர்க்கப்பட்டும் அலசடிக்கப்பட்டாலும் அவனது நம்பிக்கை மாறாமல் உறுதியாயிருந்தது (மாற் 10:46 52)

முதலாவது நபரிடத்தில் கிறிஸ்து தாமே வந்து நின்றார். இரண்டாம் நபர் மற்றவர்களின் மன்றாட்டோடு அவரிடத்தில் கொண்டுவரப்பட்டான். மூன்றாம் நபர் மக்கள் கூட்டத்தால் எதிர்க்கப்பட்டும், முழு நம்பிக்கையுடன் அவர் பின்னே வந்தான். இவனுக்காக யாரும் வேண்டிக்கொள்ளவோ, கைபிடித்து அழைத்து செல்லவோ, கண்களைத் தொடவோ, உமிழவோ, சேறுண்டாக்கவோ தேவையில்லாதிருந்தது. ஒரு வார்த்தை சொன்னமாத்திரத்தில் அற்புத சுகம்! மூவருமே தெய்வீக வல்லமையால் சுகம் பெற்றாலும், பெற்றவிதம் அவரவர் விசுவாச மட்டத்திற்கேற்ப வேறுபட்டது. ஒருவேளை மூவரும் சந்திக்க நேர்ந்தால், தாங்கள் சுகம் பெற்ற முறையே சரியானது. அதுவே தேவன் செயல்படும் முறை என்று அடித்துக்கூறினால் அது தவறு. அது கிட்டப்பார்வையுடையது, உண்மைக்குப் புறம்பானது செயல் முறையல்ல.

மூவரும் ஒன்றை உறுதியாகக் கூறமுடியும்: "நான் குருடனாயிருந்தேன், இப்போது காண்கிறேன்; இது ஒன்றுதான் எனக்குத் தெரியும்." கிறிஸ்து செயல்பட்டார். விசுவாசக் கருவி பலவிதத்தில் பயன்படுத்தப்பட்டது. கிறிஸ்துவும் வெவ்வேறு விதங்களில் செயல்பட்டார். முறைகள் பரவசமூட்டும் முடிவைத் தந்தாலும், கிறிஸ்து வேறுவேறு முறைகளைப் பயன்படுத்தினாரென்பது நம்மை வியப்படையச் செய்கிறது.

ஜெபத்திற்கு எல்லையேது? அதன் பயன்தான் எவ்வளவு? அது மனிதனைப் பாதிப்பது எப்படி? இகத்திற்கும், பரத்திற்குமுரிய எல்லா நன்மைகளையும் ஜெபம் பெற்றுத் தர முடியுமா? இதற்கான விடைகள் ஜெபத்தின் வல்லமையை விளக்கும், விடையைப் பவுலிடம் கேட்டால், அவனளிக்கும் பதில் "நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாமல், எல்லாவற்றையும் குறித்து உங்கள் விண்ணப்பங்களை ஸ்தோத்திரத்தோடே கூடிய ஜெபத்தினாலும் வேண்டுதலினாலும் தேவனுக்குத் தெரியப்படுத்துங்கள்" (பிலி 4:6). ஆம், அனைத்துமே ஜெபத்தினால் சாத்தியம்!



# 4

# ஜெபம் நமது வல்லமை

கிறிஸ்தவரின் தலையாய தொழில் ஜெபமே. மனிதரால் மட்டுமே செய்யப்படவேண்டிய இறைபணி அது. மன்னரின் உறவினர் மன்றாடியே ஆகவேண்டும். நாம் அவரால் அழைக்கப்பட்டிருப்பது செல்வம் சேர்க்கவோ, வியாபாரம் பண்ணவோ அல்ல, வேண்டுவதற்கே! அவை தேவையாயினும் தேவனுக்கு முன் அவை தேவையற்றது. இங்கு அதில் பெருகினாலும் மறுமைக்கு அது வராது; இம்மையிலும் அது வராது. இம்மையிலும் அது மனிதருக்கு நன்மையொன்றும் செய்வதில்லை. மண்ணிலோ, விண்ணிலோ இவற்றால் மனிதர் நற்குணம் அடைவதில்லை. ஜெபமோ நம்மை அவருக்கு முன் பெருஞ்செல்வந்தராக்குகிறது. பணிவான ஜெபத்தால் தேவன் மீது பயபக்தியும் பெருகும். பரிகாரியின் மேல் நாம் சாரும் பற்றே ஜெபம். ஜெபிக்காமலிருப்பது கிறிஸ்துவைப் புறக்கணிப்பதாகும். மன்றாட்டு வாழ்வே மன்னாதி மன்னரால் மெச்சப்படும் மேலான வாழ்வு!

நாம் ஜெபிக்க வேண்டுமென்பதே தேவனின் ஏக்கம். ஜெபத்தால் நாம் உயர்கிறோம்! உலகையும் உயர்த்துகிறோம். உலகை அசைக்கும் உன்னதப் பணி ஜெபத்தின் மூலமே சாத்தியம். அவருக்குப் புகழும், மனுக்குலத்திற்கு மேன்மையும் உண்டாவது ஜெபத்தில்தான். தேவ பக்தியுள்ள இளைய தலைமுறையை, சீரிய சமுதாயத்தை உருவாக்க ஜெபத்தினால் மட்டுமே முடியும்.

மகத்தான மறைவாக்குகளை ஊக்கமான உறுதியான வேண்டுதலினால் நமக்கு சொந்தமாக்காவிட்டால் அவை பயனற்றவை. அவை விதைக்கப்படா விதைகள். அது முளைத்து, வளர்ந்து, செழித்து பலன்தர ஜெப நிலம் தேவை. ஜெபமே நமது மூச்சு. இறைப்பணி நிறைவேறுவது முழங்கால் ஜெபத்தினாலேயே, அதன் சிகரம் சேர உதவுவது இடைவிடா ஜெபமே. அந்த ஜெப ஆவியும் இறைவனின் ஈவே!

மன்றாட்டும், மன்றாடுபவருமே தேவ வல்லமையின் வாய்க்கால்கள், ஜெப வேளையில் தேவனோடு நெருங்கி உறவாடுகிறோம். அவரது மகிமையில் களித்திருக்கும் மன்றாட்டு வேளையைப் போல பெறும் வேளை அதுவே. எவ்வளவாய் அவரை நெருங்கிச் சேருகிறோமோ அவ்வளவாய் ஆசீர்வதிக்கப்பட்டு அவர் சாயலாகிறோம். இறையன்பின் அளவுகோல் ஜெப வேளையே. ஜெபிக்கத் தெரியாதவன் தேவனை அறியாதவன். ஜெப அறையில் நுழையாதவன் நேசரை நெருங்காதவன். இறைப்பணித் தரிசனம் ஜெப அறையில் தான் கிடைக்கும். "உன்னதமானவரின் மறைவிலிருக்கிறவன் சர்வ வல்லவருடைய நிழலில் தங்குவான்" (சங் 91:1).

இறைவனைக் காண ஜெபமின்றி வழியேது? வல்ல இறைவனின் மாறாக்கட்டளை நாம் ஜெபிக்கவேண்டுமென்பதே. ஜெபத்தில் தான் அவர் வழிகளை அறிகிறோம். நமது ஜெபமே தேவனுக்குப் பேரானந்தம், பேரின்பம்! அது ஆசரிப்புக் கூடாரத்தின் தூபவர்க்கம். அது அனைத்தையும் செறிவுறச் செய்து, மணமூட்டி இனிமையாக்குகிறது!

இறைமகன் இயேசு மனுவுலக மீட்பிற்காக இவ்வுலகிற்கு இறங்கி வந்த வேளையில் அவருக்குப் பிதாவின் வாக்கு: "என்னைக் கேளும், அப்பொழுது ஜாதிகளை உமக்குச் சுதந்திரமாகவும், பூமியின் எல்லைகளை உமக்குச் சொந்தமாகவும் கொடுப்பேன்" (சங் 2:8). ஆம்! ஜெபத்தின் மூலமே அவர் அனைத்தையும் பெற்றுக் கொள்ள முடியும். மனுக்குலத்தின் மீட்பு சாத்தியமாவது ஜெபத்தினாலேயே. தேவனுடைய வழிகள்தான் எவ்வளவு ஆழமும், ஆச்சரியமும், அற்புதமுமானவைகள்!

தேவ வாக்குகள் மட்டுமல்ல, தேவனோடிருக்கும் நம் உறவும்,

ஜெபத்திற்குப் பதில் நிச்சயமென உறுதிப்படுத்துகின்றன. அதற்குக் கிறிஸ்து தரும் திருவார்த்தைகள்தான் எத்தனை எத்தனை!

"நீயோ ஜெபம் பண்ணும்போது உன் அறைவீட்டுக்குள் பிரவேசித்து, உன் கதவைப் பூட்டி அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு; அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலனளிப்பார்" (மத் 6:6).

"பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது, பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக நிச்சயமல்லவா?" (மத் 7:11)

இவ்வண்ணம் ஏராள வாக்குகளாலும், தாராள பரலோக அருளினாலும், இறைவன் நம்மை ஜெபிக்க ஊக்குவிக்கிறார். என்னே அரிய வாக்குகள்! "எவைகளைக் கேட்பீர்களோ, அவைகளையெல்லாம்" (மத் 21:22). "அவைகளையெல்லாம்" என்ற சொல் எல்லாவற்றையும் குறிக்கிறது; அதில் தகுதியோ, தரமோ, விதிவிலக்கோ, எல்லையோ இல்லை. சிறிதோ பெரிதோ எதையும் கேட்டுப்பெற்றுக் கொள்ளலாம். இறைவன் நமக்கிடும் சவால்: "என்னை நோக்கிக் கூப்பிடு, அப்பொழுது நான் உனக்கு உத்தரவு கொடுத்து, நீ அறியாததும் உனக்கு எட்டாததுமான பெரிய காரியங்களை உனக்கு அறிவிப்பேன்" (எரே 33:3). குறிப்பிட்ட தேவைகளுக்காக குறிப்பாக ஜெபிக்கவேண்டும்.

நாம் அதிகம் கேட்கத் தவறுவதால் அவருடைய வல்லமையை மட்டுப்படுத்திவிடுகிறோம் என்பதே அவருடைய குற்றச்சாட்டு. "நாம் வேண்டிக் கொள்ளுகிறதற்கும், நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய்... நமக்குச் செய்ய வல்லவர்" என்பதை நமக்கு நினைவூட்டுகிறார் (எபே 3:20). அவரின் எல்லையில்லா வல்லமை நம்மை வியக்கச் செய்கிறது. "வருங்காரியங்களை என்னிடத்தில் கேளுங்கள்; என் பிள்ளைகளைக் குறித்தும், என் கரங்களின் கிரியைகளைக் குறித்தும் எனக்குக் கட்டளையிடுங்கள்" (ஏசா 45:11) என நமக்கு அறிவுறுத்துகிறார். வெறும் வாக்குகளையல்ல, தன் சொந்தக் குமாரனையே நமக்காக

தந்திருக்கிறார். "தம்முடைய சொந்தக் குமாரனென்றும் பாராமல் நம்மெல்லாருக்காவும் அவரை ஒப்புக் கொடுத்தவர், அவரோடே கூட மற்ற எல்லாவற்றையும் நமக்கு அருளாதிருப்பது எப்படி?" (ரோ 8:32)

தேவன் தம் குமாரனின் எல்லாவற்றையும் அருளிச் செய்திருப்பதால், ஜெபத்தில் நாம் கேட்டவைகளைப் பெற்றுக்கொள்வது எத்தனை நிச்சயம்! இறைமகனே நமக்கு ஈவாம்! இகத்திலோ பரத்திலோ, இறைமகனால் நமக்கருளப்படாதது ஒன்றுமில்லை. கிறிஸ்துவில் நமக்குள்ள ஒப்பற்ற ஆசிகளை ஜெபத்தின் மூலமே தந்தருள்கிறார். "தைரியமாய் கிருபாசனத்தண்டையில் சேரும்படி" ஆணையிடுகிறார் (எபி 4:16).

இறைவாக்குகள் இறைவனின் திட்டங்களோடு இணைந்தே செல்கின்றன. அவர் ஜெபத்தின் மூலமே அனைத்தையும் செய்வதால் அவை நிறைவேறுவதும் ஜெபத்தினால்தான். எசேக்கியேல் தீர்க்கனுக்கு தேவனருளிய வாக்கு அதைத் தெளிவுபடுத்துகிறது. "கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறது என்னவென்றால்: இஸ்ரவேல் வம்சத்தாருக்காக நான் இதை அநுக்கிரகஞ்செய்யும்படி அவர்கள் என்னிடத்தில் விண்ணப்பம் பண்ணவேண்டும்" (எசே 36:37)

குமாரனும் தன் குறியீடுகளை ஜெபத்தினாலேயே நிறைவேற்ற வேண்டியிருந்தது (சங் 2:8). புறவினத்தாரை இறைமக்களாக்க ஒரே நிபந்தனை "என்னைக் கேளும்" என்பதே. ஆனால் வருந்தத்தக்க விதத்தில் இன்று அவ்வாக்கு நிறைவேறாததற்குக் காரணம் கர்த்தரின் பலவீனமல்ல.. நம் ஜெபமின்மையே. மாறா இறை வாக்குகளை மன்றாட்டில் சுதந்தரித்தால் மகிமை நிறை பலன்களைத் தரும்.

கிறிஸ்துவினிமித்தம் செயல்பட தேவனைத் தூண்டுவது ஜெபமே. "அவர் நிமித்தம் இடைவிடாமல் ஜெபம் பண்ணப்படும்" (சங் 72:15). ஆம் கிறிஸ்துவின் அனைத்துத் திட்டங்களும் ஜெபக் கரங்களில் விடப்பட்டுள்ளன.

மேய்ப்பனில்லா ஆடுகளைப் போலிருந்த மக்கள் கூட்டத்தைக் கண்டு கிறிஸ்து மனதுருகினார். அறுவடைக்கு ஆட்களின் மாபெரும் தேவையை

உணர்ந்து “அறுப்புக்கு எஜமான் தமது அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி அவரை வேண்டிக் கொள்ளுங்கள்” என தம் சீடருக்குச் சொன்னார் (மத் 9 : 36-38). தேவ திட்டம் – அதிக வேலையாட்கள்; அதை அடைவது – ஜெபத்தின் மூலமே.

தேவனின் அநாதித் தீர்மானம் நிறைவேற, விசுவாசிகள் “தேவனுடைய சகல பரிபூரணத்தாலும் நிறையப்பட”பவுல் ஜெபித்தான் (எபே 3:14-19).

தன் சிநேகிதருக்காகவும், தன் சிறையிருப்பு மாற்றப்படவும் யோபு ஜெபிக்க வேண்டியிருந்தது (யோபு 42:10).

மனுக்குலத்தின் மீட்பிற்காக பரிசுத்தர் ஜெபிக்க வேண்டிய அவசியத்தை வெளிப்படுத்துதல் முதல் எட்டு அத்தியாயங்கள் தெளிவாக விளக்குகின்றன. பரலோகில் சபையின் தூதுவர்கள் ஒவ்வொருவரும் “பரிசுத்தவான்களுடைய ஜெபங்களாகிய தூபவர்க்கத்தால் நிறைந்த பொற்கலசங்களையும்” பிடித்ததுக் கொண்டிருந்தது ஜெபத்தின் முக்கியத்தைக் குறிக்கிறது (வெளி 5:8). இறையரசு வெற்றி நடைபோடுவது ஜெபத்தினால்தான். இறைவாக்குகள் முழுப் பலனடைய உதவுவது ஜெபமே.

ஜெபம் வெறும் வாக்குகளை மட்டுமே சார்ந்திராமல், தேவனோடு நமக்குள்ள உறவையும் சார்ந்துள்ளது. மனந்திரும்பும் பாவி இறைவாக்கைப் பற்றிப் பிடிக்கிறான். விசுவாசிகள் பிறப்புரிமையோடு ஜெபிக்கின்றனர். தகப்பனுடையதெல்லாம் பிள்ளைகளுக்கே. பிள்ளை கேட்டால் தகப்பன் கொடுக்கிறார். பிள்ளையும் முற்றிலும் தந்தையையே சார வேண்டும். அதுவே உறவின் அடையாளம்.

நமது உறவுகளில் கேட்பதும், கொடுப்பதும் இயல்பு. அது உறவை வலுப்படுத்தி, வளப்படுத்துகிறது. தகப்பன் தனக்குக் கீழ்ப்படியும் பிள்ளைக்கு கொடுப்பதில் பேருவகை அடைகிறான். அதே போல பிள்ளையும் பெறுகையில் தகப்பனின் அன்பில் களிக்கிறது!

தீமை நிரம்பிய நினிவே நகரையழிக்க தேவன் சித்தங்கொண்டார்.

“இன்னும் நாற்பது நாள் உண்டு. அப்பொழுது நினிவே கவிழ்க்கப்பட்டுப்போம்” என்ற யோனாவின் வார்த்தைகளைக் கேட்டவுடன் நினிவேயினர் செய்த மூன்று நாள் உபவாச ஜெபம் அவர் மனதையே மாற்றிவிட்டதே (யோனா 3:4,10).

சர்வ வல்லமையுள்ள தேவன் சாமான்யராகிய நம் ஜெபத்தில் கரிசனையுள்ளவர். நாம் ஜெபிக்க விரும்புகிறார். கட்டளையிடுகிறார். பரத்தில் கிறிஸ்து இன்றும் ஜெபித்துக் கொண்டேயிருக்கிறார். ஆவியானவரும் நமது பலவீனங்களில் “வாக்குக் கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார்” (ரோ 8:26). நம் ஜெபத்தில் தேவன் கரிசனையோடிருப்பதற்கு இதை விட வேறு சாட்சி வேண்டுமா? மேலும் இது ஜெபத்தின் வல்லமையையும், இறையரசிற்கு ஜெபத்தின் அவசியத்தையும் தெளிவுபடுத்துகிறது. தேவன் நமக்கிட்ட கட்டளை: “எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள். எல்லாவற்றிலேயும் ஸ்தோத்திரஞ் செய்யுங்கள்; அப்படி செய்வதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்களைக் குறித்துத் தேவனுடைய சித்தமாயிருக்கிறது” (1 தெச 5 : 16-18). மகிழ்ச்சியுடனிருப்பதும், எல்லா வற்றிலும் ஸ்தோத்திரஞ் செய்வதும் ஜெபத்தைப் பொறுத்ததே. ஜெபத்தின் மூலம் இறைவன் உயர்த்தப்படுகிறார். இறையரசு இறங்கி வருகிறது. பரத்தைப் போல் இப்பூவிலும் அவர் விருப்பம் செய்யப்படுவது ஜெபத்தினா லேயே, அன்றாட ஆகாரம் அருளப்படுவதும், மன்னிப்புகிட்டுவதும், பிசாசை மேற்கொள்வதும் ஜெபத்தினாலேயே, ஜெபம் பரத்தையும், இகத்தையும் இணைக்கிறது.

ஜெபத்தினால் பெறக்கூடாத நன்மை எதுவும் இல்லை; மாற்ற முடியா பழிவாங்குதலில்லை; நிறுத்த முடியா நியாயத் தீர்ப்பில்லை. சவுலின் மேல் தேவகோபம் எவ்வளவாயிருந்திருக்க வேண்டும்! ஆனால் அவன் ஜெபித்தவேலையில் தேவன் இரங்கினார் (அப் 9:11).

கீழ்ப்படிய மறுத்த யோனா கடலில் மூழ்காமல், மீன் வயிற்றிலிருந்தும் தப்பியது ஜெபத்தினால்தான்! (யோனா 2:2-8)

இயேசு கிறிஸ்துவின் பெயரால் ஏறெடுக்கப்படும் ஜெபங்களும்,

வேண்டுதல்களும், விண்ணப்பங்களுமே இறையாசிகளை நமக்கு அருளுகின்றன.

இறைவனோடு நமது உறவை உறுதிப்படுத்தும் கருவி ஜெபமேயன்றி வேறில்லை. அவரது பிள்ளைகள் எல்லாவற்றிற்கும் அவரைச் சார்ந்து, அவரையே வேண்டிக்கொள்வர். பிள்ளை வேண்டிக் கொள்வது, தகப்பன் மீதிருக்கும் பற்றுறுதியையே காட்டுகிறது. இறைவனொருவர் இருக்கின்றார். அவன் மனுவுலகுடன் ஈடுபாடு கொள்ளுகிறார் என இவ்வுலகிற்கு எடுத்துக்காட்டுவது ஜெபமே. ஜெபம் பதிலளிக்கப்படுவது பரமன் அருகிலிருப்பதை உறுதிப்படுத்தும். இறைவனோடுள்ள நம் உறவிற்கும், நாம் அவருடையவர்கள் என்பதற்கும் பதிலளிக்கப்பட்ட ஜெபங்களே சான்றுகள். ஜெபியாதோர் கிறிஸ்துவை மக்களுக்கு வெளிப்படுத்தவே முடியாது.

மனிதனின் தேவைகளைத் தீர்த்திட தேவனுக்கிருக்கும் விருப்பமும் எண்ணிலடங்கா வாக்குகளும் ஜெபத்தின் சாத்தியக் கூறுகளை சாட்சியிடுகின்றன. மனிதரைப் போல அதிகத் தேவையுள்ளவரும், அத்தேவையைத் தீர்ப்பதில் தேவனைப் போல அதிக விருப்பமுள்ளவரும் எவரும் இல்லை.

மேடைப்பேச்சு மக்களை மாற்றாது; முழங்காலின் கண்ணீர் ஜெபமே அதனைச் செய்திடும். மனிதரின் மீட்பே இறைவனின் ஏக்கம் (1 தீமோ 2:4). தன் மைந்தனைக் கல்வாரி மேட்டில் சாகக் கொடுத்தது அதற்காகத்தானே. மனிதரின் மீட்பிற்காக நாம் கண்ணீர் சொரிந்து மன்றாடுவதே அவரது மனமகிழ்ச்சி. அவரது மகிழ்ச்சியே நமது ஏக்கமானால் மன்றாட மறுப்போமா? ஜெப அறையே நமது பாசறையாகட்டும். ஜெபிப்பதே நமது தொழிலாகட்டும். தேவ சித்தம் செய்ய நமக்கிருக்கும் அள்வற்ற ஆர்வத்தை அது புலப்படுத்தட்டும்.

எல்லா முறையிலும் நாம் ஜெபிக்க வேண்டும் என்பதைப் பவுல் தீமோத்தேயுவிற்கு வலியுறுத்துகிறான் (1 தீமோ 2:1) நமது முன் மாதிரி கிறிஸ்து ஒரு மன்றாட்டு வீரர். உலகில் தோன்றியது முதல் மண்ணில் மடியுமட்டும் மன்றாடுவதொன்றே அவரது தொடர் பணியாயிருந்தது.

இன்றும் பரத்தில் அப்பணியில் தொடர்ந்து நமக்காக மன்றாடுகிறார். நமக்காக வாழ்ந்து மரித்தார். அவருடைய இக வாழ்வும், நித்திய வாழ்வும் நமக்காக மன்றாடுகின்றன.

இப்படிப்பட்டவரின் சீடனுக்கு இவ்வுலகில் செய்யவேண்டிய வேறு முக்கிய வேலை என்ன? இதை விட மகிமையான இறைப்பணி வேறெது? பிறருக்காக மன்றாடுவதின் மூலம் கிறிஸ்துவின் உடன் ஊழியராவோம். ஜெபத்தின் மூலம் மனிதரை பாவத்தின் கட்டவிழ்த்து, நரகத்தின் நுகத்தை முறித்து, அவர்களை அழிவிலிருந்து அகற்றி, மாறா ஒளியும் உயிரும் கொடுப்போம்.



# 5

# ஜெபிப்பது எப்படி?

முன்னோடி ஊழியர்கள் முழங்காலில் முன்னேறினர். இன்றைய மறைநூல் போதகரோ அதை மறந்தவர்கள். ஆவியில் மரித்துப்போன மதப்பிரசங்கிகள் எப்படி ஜெபிப்பர்? மனிதருக்கு முன் மடமடவென வார்த்தைகளை அள்ளிக் கொட்டத்தான் அவர்களுக்குத் தெரியும். இறைவனுக்கு முன்னே மண்டியிடத் தெரியாது. அவர்களுக்கிருப்பது சொல்லலங்காரமேயன்றி செயல்திறன் அல்ல.

இயேசுவின் சீடர்களும் குறைந்தவர்களல்ல. அவர்கள் இயேசுவைச் சுற்றித்திரிந்தது அவரைப்போல் அற்புதங்கள் செய்திட, அவரைப்போல் பேசிட, அந்நியர் கண்களுக்கு முன் ஆடம்பரமாக வாழ்ந்திடவே, பாடுபடும் எண்ணம் அவர்களிடத்தில் கிடையவே கிடையாது. அவர்கள் வாழ்க்கை பிறருக்கு ஒரு கேள்விக்குறியே! “அவர்கள் அவரிடத்தில் வந்து யோவானுடைய சீடரும், பரிசேயருடைய சீடரும் உபவாசிக்கிறார்களே, உம்முடைய சீடர் உபவாசியாமலிருக்கிறதென்னவென்று கேட்டார்கள்” (மாற்கு 2:18)

வேண்டுதல் வீரனும், மன்றாட்டு மன்னனும ்ன கிறிஸ்துவே அக்கலையை நமக்கு கற்றுத்தர முடியும். அவருடைய வாழ்க்கையே நமக்கு சீரிய எடுத்துக்காட்டு. “அவர் மாம்சத்திலிருந்த நாட்களில், பலத்த

சத்தத்தோடும் கண்ணீரோடும் வேண்டுதல் செய்து, தமக்கு உண்டான பயபக்தியினிமித்தம் கேட்கப்பட்டு" (எபி5:7). பாரம்பரிய பரிசேயக் கட்டத்தின் அலங்கார ஜெபத்திற்கு முன் அவருடைய மன்றாட்டு எத்தனை மாறுபட்டது!

ஜெபத்தின் மேன்மையைத் தெளிவாகக் கற்றுத் தருபவர் கிறிஸ்துவே. ஜெபமே அவரது சிந்தையின் மையம் உரைகள், உவமைகள், உண்மை நிகழ்ச்சிகளால் நமக்குப் போதிக்கிறார். சீரோபேனிக்கியா தேசத்தாளாகிய கிரேக்க மாதுவும், குருடனாயிருந்த பர்திமேயுவும் விடாப்பிடி வேண்டுதலுக்கு எடுத்துக்காட்டுகள். யவீரும், நூற்றுக்கதிபதியும் விசுவாசத்திற்கு எடுத்துக்காட்டுகள். பரிசேயனும் ஆயக்காரனும் தாழ்மைக்கு உவமை.

ஜெபத்தின் அத்தியாவசியம் ஒருமனம். இரு உள்ளங்கள் உடன்பட்டால் கேட்பதெல்லாம் கிடைக்கும். கிறிஸ்துவின் அன்பை ருசித்தவர்களும், சகோதர அன்பைப் பயிற்சித்துக் காத்தவர்களுமே ஒருமனதுடன் ஜெபிக்க முடியும்.

ஜெபத்தின் பல அரிய கோட்பாடுகளை மலைப்பிரசங்கத்தில் காணலாம். அதில் பழைய ஏற்பாட்டு நிழல்கள் மறைந்து ஆவிக்குரிய வாழ்வின் உருவம் வெளிப்படுகிறது.

கிறிஸ்தவ வாழ்வின் மையம் ஜெபம். அது மிக முக்கிய செயல் மட்டுமல்லாமல், மற்றசெயல்களுக்குச் சார்பாகவும் அமைகிறது. மற்றெந்த மேன்மைக்குரிய அலுவலும் ஜெபத்திற்கு அடுத்ததே.

ஆசிகளை அள்ளித்தரும் இந்த ஜெபம் பசி, தாகம், களைப்பு போன்று இயல்பாக வருவதில்லை. ஏனெனில் அது ஆவிக்குரியது. எனினும் அத்தியாவசியமானது. அதுவே அனைத்துலகச் சட்டம், ஜெபமின்மையைப் போல் கீழ்ப்படியாமை எதுவுமில்லை. எனவே ஆண்டவரின் கிருபையோடு ஜெபிக்கக் கற்றுக் கொள்வோம். பயிற்சிப்போம், பயனடைவோம்.

இதில் பிள்ளை தகப்பனிடம் அப்பம் கேட்டதை ஒப்பிடுகிறார் கிறிஸ்து. பிள்ளைப்போல் பரம பிதாவிடம் கொஞ்சிக் கேட்டுக் குலாவ வேண்டுமாம்.

ஜெபம் அந்தரங்கத்தில் செய்யப்பட வேண்டும். வெறுமையாகவோ, பெருமையுடனோ அல்ல தூய்மையாகத் திகழவேண்டும். ஜெப அறையில்தான் நாம் இறைவனை நேர்முகமாகக் காணலாம். "நீயோ ஜெபம் பண்ணும்போது உன் அறைவீட்டுக்குள் பிரவேசித்து, உன் கதவைப்பூட்டி, அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு. அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலனளிப்பார் " (மத் 6:6)

பாக்கிய வசனங்களின் துவக்கமே ஜெபத்தை வலியுறுத்துகிறது. "ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்" (5:3). எளிமை என்றால் ஏழ்மை எனப் பொருள். கிறிஸ்தவ வாழ்வே கிறிஸ்து போடும் பிச்சைதான். ஆகையால் ஜெபம் ஆவிக்குரிய வாழ்க்கையின் அடிப்படை. கிறிஸ்துவின் ஈகையும், கிறிஸ்தவனின் உயிர்த் துடிப்பும் ஜெபமே. ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கிய வான்கள். ஏனெனில் அவர்களால் ஜெபிக்கத்தான் முடியும்.

ஜெபமே ஜீவன் ஜெபம் ஜெயம்
ஜீவியத்திற்கு இதுவே சட்டம்
ஜெபமே ஜீவன் ஜெபம் ஜெயம்
ஜீவியத்திற்கு இதுவே சட்டம்.

ஜெபத்தில் தற்பெருமைக்கு இடமேயில்லை. ஆவியில் எளிமையுள்ளவர்களே ஜெபிக்கிறவர்கள். பிச்சைக்காரரே அவர் புத்திரர். அவர்களே அவரின் சுதந்திரவாளிகள்.

அயலானோடு நல்லுறவு கொள்ளாதவன், கசப்பான இதயமுடையவன், கோபம் நிறைந்தவன் வாய் தவறி வேண்டுவதெல்லாம் வீணே. இதனால் அவன் பாவம் தான் பெருகும். ஏனெனில் ஜெபிக்க சகோதரர் அன்பு அவசியம். அன்பெனும் எண்ணெய் ஊற்றியே ஜெபதீபம் ஏற்றப்படவேண்டும் (மத் 5:21-24).

நம்முடைய ஜெபத்தைக் கேட்க அவர் ஆவலாய் இருக்கிறார். கேட்பதெல்லாம் தந்துவிடத் துடிக்கிறார். "கேளுங்கள்" என்பதே அவர் கட்டளை. அப்படியிருக்க, ஜெபத்திலே உண்மையாய்த் தரித்திருப்பவர்கள்

அதன் பலனைக்காண்பார்கள் என்பதில் ஐயமேது? “கேட்கிறவன் எவனும் பெற்றுக் கொள்ளுகிறான், தேடுகிறவன் கண்டடைகிறான், தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்” (7:8). இதைவிட உறுதி வேறு தேவையோ? “ஆகையால் பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது, பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக்கொள்ளு கிறவர்களுக்கு நன்மையானவர்களைக் கொடுப்பது அதிக நிச்சயம் அல்லவா?” (மத் 7:11)

“சோர்ந்து போகாமல் எப்பொழுதும் ஜெபம் பண்ண வேண்டும்” (லூக் 18:1) என்பதை அந்த அநீதியான நீதிபதியின் உவமை மூலம் விளக்குகிறார். மனிதர் எப்போதும் ஜெபத்தில் நிலைத்திருப்பது அவசியம். நம்பிக்கையும் நீடிய பொறுமையும் தளராத ஜெபத்திற்குத் தேவை. ஜெபத்திலே எவ்வளவாக தரித்திருக்கிறோமோ அவ்வளவே அவரை அறியமுடியும். அந்த அளவே பலனடையக்கூடும். “தேவன் தம்மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிறவர்களாகிய தம்மால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களின் விஷயத்தில் நீடிய பொறுமையுள்ளவராயிருந்து அவர்களுக்கு நியாயஞ்செய்யாமலிருப்பாரோ?” (வச. 7).



# 6

# ஜெபத்திற்கு நிபந்தனைகள்

இயேசு கிறிஸ்து இவ்வுலகுக்கு அருளிய ஈவுகளில் தலைசிறந்தது ஜெபம். ஜெபத்தின் சிறப்பை நமக்கு உணர்த்தலே அவர் உலகிற்கு வந்தார் என்றால் மிகையாகாது. மனுக்குலத்திற்கு அது மிக அரியது. ஆனால் அதைக் கற்றுக்கொள்ள விருப்பமற்று பலர் அதைத் தள்ளிவிடுவது எத்தனை வருத்தம். கிறிஸ்துவின் சீடர்களோ எதைக் கற்காவிட்டாலும் ஜெபத்தின் அருமையைக் கற்பதில் பின் தங்கவில்லை.

கிறிஸ்து உடனிருந்த நாட்களில், சீடர்களுக்குக் குறைவேதுமில்லை. ஆனால் அவர்களின் ஆவிக்குரிய மேன்மைக்கு ஜெபம் அத்தியாவசியம் என்பதை அவரிடமிருந்து தெளிவாக அறிந்து கொண்டனர். கிறிஸ்து ஜெபிப்பதைக் கண்டு தங்களது குறைவை உணர்ந்து அவரை நோக்கி, "ஆண்டவரே, யோவான் தன் சீடருக்கு ஜெபம் பண்ணப் போதித்ததுபோல நீரும் எங்களுக்குப் போதிக்கவேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர் (லூக் 11:1)

கிறிஸ்து மிக எளிமையாக ஆனால் வல்லமையுடன் ஜெபித்தார். மனிதனாக இருந்தே இறைவனை ஜெபத்தில் அசைத்தார். இதுவே சீடர்களைக் கேள்வி கேட்கவும் கற்றுக் கொள்ளவும் தூண்டியது. கிறிஸ்துவின் கலங்கிய கண்களும், உயர்த்தப்பட்ட கரங்களும் சீடரின் ஜெபக் குறைவைத் தொடர்ந்து கண்டித்து உணர்த்தியது. இக்குறைவை உணராதோர் யார்?

கிறிஸ்து தம் சீடருக்கு ஜெபத்தின் அவசியத்தைப் பலமுறை படிப்பிக்க வேண்டியிருந்தது. ஏனெனில் அவர்களின் புத்தியீனம் அவர்கள் கற்றவைகளையெல்லாம் உடனடியாக மறக்கச் செய்தது. நாமும் அப்படித்தானே!

இறைவன் ஜெபத்திற்குப் பதிலளிக்கிறார் என்பதை கிறிஸ்துவின் வாழ்க்கை மூலம் வேதம் தெளிவாக்குகிறது. அவர் கற்பித்த ஜெபம் வெறுமையானதல்ல. அது வேண்டியதைப் பெறும் வேண்டுகோள், வெற்றிதரும் விண்ணப்பம், நன்மைகளைப் பெறும் நம்பிக்கை. கேட்டால்தான் எதுவும் கிடைக்கும். தேடினால் தான் எதையும் கண்டடைய முடியும். தட்டினால்தான் எக்கதவும் திறக்கும். இதுவே இறைநீதி.

மறுரூப மலையிலிருந்து இறங்கி வந்த இயேசுவுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. அற்புதங்கள் செய்ய அனுப்பப்பட்ட சீடர்கள் ஆனந்தத்தோடு திரும்பாமல் தலைகுனிந்து தோல்வியால் துவண்டு குழப்பத்துடன் நின்றிருப்பதைக் கண்டார். எதற்காக அழைக்கப்பட்டார்களோ அதிலேயே தோல்வி. பேய் பிடித்த சிறுவனின் தந்தை பதறி, பிதற்றி பரிதாபமாகக் காட்சியளித்தார். இரக்கத்தின் இறைவனோ அவர்களை வீதியில் விட்டுவிடவில்லை. தக்க சமயத்தில் பாதுகாத்தார். ஆனால் அவர்களோடு தனித்திருக்கும் போது அன்புடன் அறிவூட்டினார். "இவ்வகைப் பிரசாசு ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டுப் போகாது" என்றார் (மாற் 9:29), ஜெப அறை அசதி ஊழியக் களத்தில் தோல்வியையே தரும். ஊழியத்தின் ஊன்றுகோல் ஜெபமே.

மலைபோன்ற பிரச்னைகளை மேற்கொள்ள, கடல்போன்ற கவலைகளைக் கடந்துவிட, விசுவாச ஜெபம் எவ்வளவு அவசியம் என்பதை அத்திமர நிகழ்ச்சியிலிருந்து கற்கிறோம். "இயேசு அவர்களை நோக்கி: தேவனிடத்தில் விசுவாசமுள்ளவர்களாயிருங்கள். எவனாகிலும் இந்த மலையைப் பார்த்து: நீ பெயர்ந்து, சமுத்திரத்திலே தள்ளுண்டு போ என்று சொல்லி, தான் சொன்னபடியே நடக்கும் என்று தன் இருதயத்தில் சந்தேகப்படாமல் விசுவாசித்தால், அவன் சொன்னபடியே ஆகும் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆதலால், நீங்கள் ஜெபம்

பண்ணும் போது எவைகளைக் கேட்டுக் கொள்வீர்களோ, அவைகளைப் பெற்றுக் கொள்வோம் என்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும்" (மாற் 11:13-24).

எவ்வளவு நம்பிக்கையோடு ஜெபிக்கிறோமோ அவ்வளவாக பெற்றுக் கொள்வோம். அத்திமரம் பட்டுபோனதைக் குறித்து அதிசயித்த சீடருக்கு ஆண்டவர் சொன்ன பதில், விசுவாச ஜெபம் மரத்தையென்ன மலையையே பெயர்த்து கடலின் ஆழத்தில் அமிழ்த்திவிடும் என்பதே. விசுவாசமே ஜெபத்திற்கு வலிவூட்டுவது.

மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல தொய்ந்து போனவர்களும் சிதறப்பட்டவர்களுமாயிருந்த மக்கள் கூட்டத்தைக் கண்ட இயேசு அவர்கள் மேல் மனதுருகி, "அறுப்புக்கு எஜமான் தமது அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி அவரைவேண்டிக் கொள்ளுங்கள்" என்று தமது சீடரைப் பணித்தார் (மத் 9:36-38). அறுப்புக்கு ஆட்களை அனுப்புவது அவரது பணியென்றாலும் அதை அவர் ஜெபத்தைக் கொண்டே செய்வார்.

இறையரசிற்கு ஆத்தும அறுவடை செய்ய ஆட்கள் எழுவது ஜெபத்தின்மூலமே. ஜெபமில்லையேல் ஆட்கள் அனுப்பப்படார், அறுவடையும் நடக்காது. இவ்வரிய உண்மையை திருச்சபை இதுவரை சரியாய்ப் புரிந்துகொள்ளவில்லை. சபையோ, சங்கமோ, தலைவர் குழுவோ, பெரிய மாநாடுகளோ அல்ல, இறைவனே தகுதியான ஊழியரைத் தெரிந்தெடுத்து, அறுவடைக்கு அனுப்புகிறவர். மானிடரை மீட்கும் மாபெரும் பணிக்கு ஜெபமே மூலதனம், வேலையாட்களை அனுப்பமட்டுமல்ல, களத்தைப் பண்படுத்தவும், விளையச் செய்யவும், களஞ்சியத்தில் சேர்க்கவும் ஜெபமே அவசியம். அந்த ஜெபம் இறைவனை மையமாகக் கொண்டு அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும். இல்லையேல் அது பயனற்றது.

வேத வார்த்தைகளுக்கொத்த வாழ்க்கை ஜெபத்திற்குத் தேவை. "நீங்கள் என்னிலும், என் வார்த்தைகள் உங்களிலும் நிலைத்திருந்தால், நீங்கள் கேட்டுக்கொள்வதெதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும்" (யோ 15:7)

இறைவன் விரும்புவது ஏதோ ஓர் இலட்சிய வாழ்க்கை அல்லது கட்டுப்பாடுகள் நிறைந்த வாழ்க்கையல்ல. தமது வார்த்தைகளுக்கேற்ற வாழ்க்கையே. அது கிறிஸ்துவோடு இசைந்து, இணைந்து நிலைத்து கிறிஸ்துவை வெளிக்காட்டும் வாழ்க்கை. அவர் நம்மிலும் நாம் அவரிலும் நிலைத்திருப்பது பறவையின் இரு இறக்கைகள் போன்றது. அவருடைய வார்த்தைகள் நம்மில் நிலைத்திருந்து கருவாகி, உருவாகி, ஜெபத்தின் உயிர் மூச்சாக வெளிவரவேண்டும். கிறிஸ்துவின் சிந்தையே ஜெபத்தின் ஊற்று.

"தேவன் தமது சகல பிரஸ்தாபத்தைப்பார்க்கிலும், தமது வார்த்தையை மகிமைப்படுத்தியிருக்கிறார்" என்பதைப் பழைய ஏற்பாட்டு பக்தர்கள் அறிந்திருந்தனர் (சங் 138:2). இன்றையக் கிறிஸ்தவர் இதை மறந்துவிடக்கூடாது. வார்த்தைக்கு முழுமையாகக் கீழ்படிந்து இறைவனை மகிமைப்படுத்த வேண்டும். "மனிதன் அப்பத்தினால் மாத்திரமல்ல, தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகிற ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான்" என்று மன்றாட்டு வீரன் மோசே மூலம் கற்றதை இன்றைய ஜெப வீரர்கள் சரியாய்ப் புரிந்துகொள்ளவேண்டும். கிறிஸ்து நம் மூலம் வெளிப்படுவதும், அவர் வார்த்தை நம்மில் நிலைத்திருப்பதும் ஜெபத்திற்கு வல்லமையைத் தரும். இதுவே ஜெபத்திற்கு உயிர்நாடி, கிறிஸ்து நம்மிலும், நம் மூலமாயும் ஜெபிக்கையில் நம்முடைய எண்ணமெல்லாம் அவருடையதாக, இறைவனுடைய விருப்பமாக இருக்கும். "நீங்கள் கேட்டுக் கொள்வது எதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும்" என்ற வாக்கு நிறைவேறும்.

ஜெபிக்க மற்றொரு நிபந்தனை கனிதரும் வாழ்வு. "நீங்கள் என்னைத் தெரிந்துகொள்ளவில்லை. நானே உங்களைத் தெரிந்து கொண்டேன்; நீங்கள் என் நாமத்தினாலே பிதாவைக் கேட்டுக் கொள்வது எதுவோ, அதை அவர் உங்களுக்குக் கொடுக்கத்தக்கதாக நீங்கள் போய்க் கனிகொடுக்கும்படிக்கும், உங்கள் கனி நிலைத்திருக்கும்படிக்கும் நான் உங்களை ஏற்படுத்தினேன்" (யோ 15:16).

கனியற்றோர் ஜெபிக்க முடியாது. கனி நிறைந்த வாழ்வுடையவரே கர்த்தருக்கு முன் கதறக்கூடும். கனி "தந்த" வாழ்க்கையல்ல, கனி "தரும்"

வாழ்வே அவசியம். "உங்கள் கனி நிலைத்திருக்கும்படி" என்பதின் பொருள் அதுவே. கனிகளை ஏராளமாய்த் தரும் வாழ்வே ஜெபத்தின் ஊற்ற. ஜெபிக்க நிபந்தனையும் அதுதான். "அந்த நாளிலே நீங்கள் என்னிடத்தில் ஒன்றுங்கேட்க மாட்டீர்கள். மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் கேட்டுக் கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குத் தருவார். இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றும் கேட்கவில்லை; கேளுங்கள், அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படி பெற்றுக் கொள்வீர்கள்" (யோ 16:23,24). "அந்த நாளிலே நீங்கள் என்னிடத்தில் ஒன்றும் கேட்க மாட்டீர்கள்". ஆவியானவர் அருளப்பட்டிருக்கிற நாளில் உவமைகளுக்கு விளக்கம் கேட்பதோ, மறைபொருளின் பொருளை அறிவதோ, அறியாத ஒன்றை வினவுவதோ நமது வேலையில்லை. ஜெபிப்பதே, ஜெபித்துக் கொண்டேயிருப்பதே நமது தொழில். ஜெபம் மனிதனுக்கு மகிழ்சியையும், மன்னவருக்கு மகிமையைமு தரும்.

"என் நாமத்தினாலே நீங்கள் எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன்" என்பது கிறிஸ்துவின் வாக்கு (யோ14:14). பிதாவும், குமாரனும் கேட்பதெல்லாம் தருவதாக வாக்களித்துள்ளனர். நிபந்தனை "இயேசுவின் பெயரில்" என்பதே. அவருடைய பெயரைக் கொண்டு மந்திரமோ, மாயவித்தையோ செய்வதல்ல அது. முத்துக்களில் அவர் பெயரைப் பதித்துப் பயன்படுத்துவது ஜெபத்திற்கு வல்லமை தராது. நாளெல்லாம் அவர் பெயரை முணுமுணுப்பதாலும் வெற்றி கிட்டிவிடாது. "அந்நாளில் அநேகர் என்னை நோக்கி: கர்த்தாவே! கர்த்தாவே! உமது நாமத்தினாலே தீர்க்க தரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோம் அல்லவா? என்பார்கள். அப்பொழுது நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைக்காரரே, என்னைவிட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்குச் சொல்லுவேன்" என்பது எத்தனை பயங்கரமானது' (மத் 7:22, 23). அவர் பெயரில் அற்புதங்களையும் அடையாளங்களையும் செய்வதாக சொல்லித் திரியும் பலரின் முடிவு இப்படியும் இருக்கலாம்.

உண்மை ஈடுபாடின்றி உதட்டளவில் நாமசங்கீர்த்தனம் பாடுவதால் பயனேதுமில்லை. நீதி நேர்மையாய், தூய்மையாய் அவர் போல் நடந்து,

அவர் சாயலைத் தரித்துக் கொள்வதே அவர் பெயரில் கேட்பது, அதன் பொருள் அவரைப் போல ஆவியிலும், விருப்பத்திலும், நோக்கத்திலும் ஒன்றாவதாகும். அதாவது இயேசுவின் மூலம் இறைவனின் மகிமைக்காக ஜெபிப்பதாம். கிறிஸ்துவில் நிலைத்திருந்து, அவர் நம் மூலம் ஜெபிக்கவும், நம்மில் வாழவும், நம்மால் உயர்த்தப்படுவதுமே இறைவன் விருப்பப்படி ஆவியில் நாம் ஜெபிக்கிறோம் என்பது.

கெத்செமனேயின் கோரக் காட்சியின் நடுவிலும் தூங்கிவிழுந்து கொண்டிருந்த தம் சீடருக்கு கிறிஸ்துவின் எச்சரிக்கை : "நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெபம் பண்ணுங்கள்; ஆவி உற்சாகமுள்ளதுதான், மாம்சமோ பலவீனமுள்ளது" (மத் 26:41). கடும்புயலை நாம் எதிர்நோக்கும் வேளையில் மட்டுமல்ல, ஆபத்துக்கள் நிறைந்த நமது வாழ்க்கை முழுவதற்கும் ஜெபம் அவசியம் என்பதே இந்த எச்சரிப்பின் பொருள்.

தமது இவ்வுலகப் பணி முடிந்து ஆவியானவரின் யுகத்தை நெருங்கும் வேளை, ஜெபத்தைக் குறித்து இன்னும் உன்னத நிலைகளைக் கற்றுக் கொடுத்தார் நம் கிறிஸ்து. அதைக் கல்லூரி நிலை எனலாம். ஜெபம் மேன்மையுடையதாக மீட்பின் மையமாக மாறுகிறது. ஜெபத்தின் ஆதியும் அந்தமும், முதலும் முடிவுமாகிறார் அவர். அவர் பெயர் வல்லமை மிகுந்ததாகிறது அவர் பெயரில் ஏறெடுக்கப்படும் ஜெபம் அறிய செயல்களைச் செய்கிறது. அவரைப்போலவே அவர் பெயரும் எதையும் செய்வதால் அது எல்லாருக்கும் சொந்தம்.

"நான் பிதாவிலும், பிதா என்னிலும் இருக்கிறதை நீ விசுவாசிக்கிறதில்லையா? நான் உங்களுடனே சொல்லுகிற வசனங்களை என் சுயமாய்ச் சொல்லவில்லை; என்னிடத்தில் வாசமாயிருக்கிற பிதாவானவரே இந்தக் கிரியைகளைச் செய்து வருகிறார். நான் பிதாவிலும் பிதா என்னிலும் இருக்கிறதை நம்புங்கள்; அப்படியில்லாவிட்டாலும் என் கிரியைகளினிமித்தமாவது என்னை நம்புங்கள். மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: நான் என் பிதாவினிடத்திற்குப் போகிறபடியால் என்னை விசுவாசிக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைத் தானும் செய்வான். இவைகளைப் பார்க்கிலும் பெரிய கிரியைகளையும் செய்வான். நீங்கள்

என் நாமத்தினாலே எதைக் கேட்பீர்களோ, குமாரனில் பிதா மகிமைப் படும்படியாக, அதைச் செய்வேன். என் நாமத்தினாலே நீங்கள் எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன்" (யோ 14:10-15)

ஜெபிக்கிறவன் பிதாவோடும் குமாரனோடும் ஒன்றாகிறான். எல்லாம் கிறிஸ்துவுக்குள்ளும் அவர் பெயரில் ஏறெடுக்கப்படும் ஜெபத்திலும் இருக்கிறது. "என் நாமத்தினாலே நீங்கள் எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன்." ஜெபமே இறைவனின் திரவியக் களஞ்சியத்திற்கு திறவுகோல். அவர் பெயரைப் பற்றிக் கொண்டு மன்றாடுபவர்கள் கிறிஸ்துவைக் காட்டிலும் பெரிய செயல்களைச் செய்வர்.

தமது இகவாழ்வின் இறுதிக்கட்டத்தில் எருசலேமின் அழிவை உணர்ந்து தம் சீடரை ஜெபிக்கத் தூண்டினார். ஏனெனில் ஜெபமே அந்த அழிவிலிருந்து அவர்களைக் காக்கும். "நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்திலாவது... சம்பவியாதபடிக்கு வேண்டிக் கொள்ளுங்கள்" (மத் 24:20).

ஜெபத்தினால் எத்தனைத் தீமைகளுக்கு நாம் தப்பலாம்! எத்தனை பயங்கரங்களுக்கு விலகலாம்! எனவே கிறிஸ்து நமக்கு இடும் கட்டளை: "உங்கள் இருதயங்கள் பெருந்திண்டியினாலும் வெறியினாலும் லவுகீக கவலைகளினாலும் பாரமடையாதபடிக்கும், நீங்கள் நினையாத நேரத்தில் அந்த நாள் உங்கள் மேல் வராத படிக்கும் எச்சரிக்கையாயிருங்கள். பூமியிலெங்கும் குடியிருக்கிற அனைவர் மேலும் அது ஒரு கண்ணியைப் போல வரும். ஆகையால் இனிச் சம்பவிக்கப்போகிற இவைகளுக் கெல்லாம் நீங்கள் தப்பி, மனுஷகுமாரனுக்கு முன்பாக நிற்கப் பாத்திரவான்களாக எண்ணப் படுவதற்கு, எப்பொழுதும் ஜெபம் பண்ணி விழித்திருங்கள்" (லூக் 21:34-36).

கிறிஸ்துவின் வருகையும், நாம் அவரோடு எடுத்துக் கொள்ளப்படுவதும் எப்பொழுது என்று அறிவோம். அப்படியானால் நாம் என்ன செய்யவேண்டும்? "அந்த நாளையும் அந்த நாழிகையையும் பிதா ஒருவர் தவிர மற்றொருவனும் அறியான், பரலோகத்திலுள்ள தூதர்களும் அறியார்கள். குமாரனும் அறியார். அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால் எச்சரிக்கையாயிருங்கள், விழித்திருந்து, ஜெபம் பண்ணுங்கள்" (மாற் 13:32-33)

சீடருடன் கிறிஸ்துவின் இறுதி உரையாடல் யோவான் பதினான்கு, பதினைந்து, பதினாறாம் அத்தியாயங்களில் எழுதப்பட்டிருக்கிறது. இவை நெஞ்சை நெகிழவைக்கும் வார்த்தைகள். சீடர்கள் தங்கள் தலைவரின் நேரடித் துணையின்றி வெளியுலகிற்கு சென்று துன்பம், தொல்லை, துயரம் அனைத்தையும் சந்திக்க வேண்டியிருந்தது. அவ்வேளைகளில் ஜெபமே இழப்புக்கு ஈடுகட்டி, ஆபத்தில் ஆதரவு அளிக்கும் என்பதைத் தெளிவாக்கினார்.

அவ்வேளை கிறிஸ்துவுக்கு ஓர் உச்சகட்டவேளை. அவருக்கு எஞ்சியிருந்தது மரணமும் உயிர்த்தெழுதலுமே. தாம் செய்து வந்த மகத்தான பணியை ஆவியானவரின் ஒத்தாசையுடன் சீடர்களை செய்யும்படி விட்டுவிடவேண்டிய வேளை அது. சீடர்களுக்கோ திருப்பமும், திகைப்பும் நிறைந்த நேரமது. அவர்கள் அறிந்தது கிறிஸ்துவின் பிரிவு ஒன்றே. மற்றெல்லாம் புரியாத புதிராக இருந்தது.

அவர் ஜெபத்தோடு பிரியாவிடை பெறவேண்டிய வேளை, அரிய உண்மைகளை, ஆலோசனைகளைச் சொல்ல வேண்டிய கடைசி நேரம். பரத்தைக் குறித்துப் பேசுகிறார். ஏனெனில் பரலோக நம்பிக்கை இல்லாவிடில் அவ்வாலிபர்கள் பரமனின் பணியைச் செய்ய முடியாது. அவ்வெண்ணம் அவர்களின் உள்ளத்தில் நன்றாய்ப் பதிய வேண்டும். தம்முடன் அவர்கள் செடியும் கொடியுமாய் இருக்கிறார்கள் என்பதை விளக்குகிறார். கனிதர தம்மில் நிலைத்திருக்க வேண்டும் என்பதை நினைப்பூட்டுகிறார். இவையனைத்திற்கும் ஜெபமே மையம், உயிர் என்பதைக் கூறிவிட்டார்.

இறைவாழ்வில் வல்லமை வழிந்தோடவும், அவரது திரவியங்களையெல்லாம் பெற்றுக் கொள்ளவும் ஜெபம் அத்தியாவசியம் என்று கூறி முடிக்கிறார். அதையேதான் பவுல், “என் தேவன் தம்முடைய ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவையெல்லாம் கிறிஸ்து இயேசுவுக்குள் மகிமையிலே நிறைவாக்குவார்” என்கிறான் (பிலி 4:19).



# 7

# ஜெபவீரர் கிறிஸ்து

இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கையில் மிகச்சிறிய பகுதியையே வேதத்தில் காண்கிறோம். ஆனால் அச்சிறு பகுதியிலும் அவரது ஜெபவாழ்வையே அதிகமாகப் பார்க்கிறோம். கடின வேளையில் களைத்துப்போன பின்னும் "அதிகாலையில், இருட்டோடே எழுந்து புறப்பட்டு, வனாந்தரமான ஓரிடத்திற்குப்போய், அங்கே ஜெபம் பண்ணினார்" (மாற் 1:35). இருட்டோ, வனமோ அவருடைய தேவை தேவனே! அவர் பூவிலிருந்த நாட்கள் அனைத்தும் ஜெபமென்னும் நறுமணத்தால் நிறைந்திருந்தன. அவரைப்போல் மாற அவரைப்போல் ஜெபிக்கவேண்டும். அதுவே வளமான வாழ்வு.

சிறுவயதில் இயேசு எவ்விதம் ஜெபித்தார் என்பதை அறியோம். முதன்முறையாக யோர்தான் நதியில் யோவானிடம் திருமுழுக்குப் பெறுகையில் ஜெபிப்பதைக் காண்கிறோம். அதன்பின் ஊழிய நாட்கள் ஜெபமயமாயிருந்தன. கல்வாரிக் குருசிலும் ஜெபித்தே தம் வாழ்வை முடிக்கிறார். அவருடைய போதனையும் ஜெபத்தில் துவங்கி ஜெபத்திலேயே முடிந்தது. முதலில் தம் சீடருக்கு ஜெபிக்கக் கற்றுக் கொடுக்கிறார். முடிவில் மன்றாட்டின் மேன்மையை கெத்செமனேயில் புகட்டுகிறார். மரணத் தருவாயிலும் அவ்வரிய உண்மையை அவர்களுக்குப் போதிக்கத் தவறவில்லை.

அவரது வாழ்வு ஜெபத்திலேயே உருவாகி, உருப்பெற்றது. எனினும் சிறுவயதில் எப்படி ஜெபித்தார் என்று நமக்குத் தெரியவில்லை. தெரியவேண்டிய தேவையுமில்லை. அறியாத ஒன்றை ஆராய முற்படுவது ஆபத்தையே விளைவிக்கும். எழுதப்பட்ட வார்த்தைகள் நமக்குப் போதும்.

இறைவனின் அழைப்புக்குப் பணிந்து தமது தச்சுத்தொழிலை விட்டு இறைப் பணியாற்ற ஸ்நானன் யோவான் முன்னிலையில் வந்து நிற்கிறார். யோவானின் திருமுழுக்கும் ஆவியானவரின் நிறைவும் பெறும் நேரம் அவருடைய வாழ்க்கையில் அதிமுக்கிய வேளை. அவ்வேளையில் அவர் ஜெபிக்கிறார். அதை ஆமோதிப்பதாக பிதாவின் அறிக்கை. ஆவியானவர் இறங்கியதும், வானம் திறந்ததும், பிதா அவரைக் குமாரனென்று அறிக்கையிட்டதும் அவரது ஜெபத்தைத் தொடர்ந்துதான். “ஜனங்கெளல்லாரும் ஞானஸ்நானம் பெற்றபோது, இயேசுவும் ஞானஸ்நானம் பெற்று, ஜெபம் பண்ணுகையில், வானம் திறக்கப்பட்டது; பரிசுத்த ஆவியானவர் ரூபங்கொண்டு புறாவைப் போல அவர் மேல் இறங்கினார். வானத்திலிருந்து ஒரு சத்தமும் உண்டாகி: நீர் என்னுடைய நேசகுமாரன், உம்மில் பிரியமாயிருக்கிறேன் என்று உரைத்தது” (லூக். 3:21,22)

அவர் ஜெபித்ததால் நாமும் ஜெபிக்கவேண்டும். அவரைப் போல ஜெபிப்போமானால் அவரைப்போல் இருப்போம்; அவரைப் போல வாழ்வோம். கிறிஸ்துவின் நற்குணம், நல்வாழ்வு, நல்லெண்ணம் யாவும் நமதாகும். அவரது ஜெபம் கேட்கப்பட்டதுபோல நமது ஜெபமும் கேட்கப்படும். இன்றைக்கும் அவர் பிதாவின் வலது பாரிசத்தில் மனுக்குலத்திற்காக மன்றாடிக் கொண்டிருக்கிறார். அவருடையவர்களாக, அவரை நேசிக்கிறவர்களாக அவருக்காக வாழ்கிறவர்களாக இருப்போமானால் அவரின் ஜெபவாழ்வு நம்மைப் பற்றிக் கொள்ளவேண்டும் ஜெபிக்கக் கற்போம், ஜெபித்தே வாழ்வோம்.

இயேசு கிறிஸ்து மனிதரை நேசித்தார், மனிதருக்காக மரித்தார், மனிதருக்காகவே மன்றாடுகிறார். அவரைப் பின்பற்ற வேண்டுமானால் நமது ஜெபமும் அவ்வாறே அவரது குருதியில் தோய்ந்து, பரந்து விரிந்து, உயிரூட்டுவதாக இருக்க வேண்டும். நமது மன்றாட்டு கிறிஸ்துவின்

பணியைத் துரிதப்படுத்தி மனுக்குலத்தைப் பாவக்கட்டிலிருந்து மீட்கவேண்டும். அதற்கு அவரது கண்ணீரும் கதறலும் நமதாக வேண்டும்.

ஜெபம் எதையும் சாதிக்கும், ஜெபிக்கிறவனே கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படுவான்; உலகிற்கும் ஆசீர்வாதமாவான். "நாம் எல்லாப் பக்தியோடும் நல்லொழுக்கத்தோடும் கலகமில்லாமல் அமைதலுள்ள ஜீவனம் பண்ணுவதே" எல்லாவற்றுக்கும் மேலான நன்மையாகும் (1 தீமோ 2:2)

கிறிஸ்துவைப்போல ஜெபித்தவன் எவனுமில்லை. ஜெபமே அவருடைய நேரத்தையும், பெலத்தையும், உயிரையும் கொள்ளை கொள்ளும் முக்கிய பணியாயிருந்தது. அவரது வல்லமையின் இரகசியம், வாழ்வின் இலட்சியம், இன்னலின் இலக்கணம், மகிழ்ச்சியின் மையம் ஜெபமே. அவருக்கு ஜெபமே முதன்மையும், முக்கியமும், வாழ்வும், விருப்பமும் பெலனுமாயிருந்தது.

அவரது ஜெபமெல்லாம் பிதாவோடு இரண்டறக் கலப்பதாகவும் மகிழ்ச்சியின் ஊற்றாகவுமிருந்தது. இக்காலத் துன்பங்களும் வருங்கால மகிமையும், சென்றகாலச் சபை சரித்திரமும் முக்கால சீடர்களின் போராட்டங்களும் அவரது ஜெபத்தில் உருவாகி, உருப் பெற்றவைகளே.

அவரது வாழ்வில் ஜெபத்தைப்போல் மேலோங்கியிருப்பது வேறெதுவுமில்லை. அவரது முழு இரவு ஜெபங்களினால் தான் அவர் ஊழியம் பரவியது; வெற்றிகள் கண்டார்; வானங்கள் கிழிந்தன; மோசே எலியா ஒலிவமலைக்கு வந்தனர். அவர் செய்த அற்புதங்களும் போதித்த போதனைகளும் அதன் பலனே. கல்வாரி காட்சிக்குப் பின் திரைமறைவில் இருப்பது கெத்செமனே ஜெபம். அவரின் ஆசாரிய ஜெபமே சபைத் தரித்திரத்தைப் படைத்தது. என்னே அவரது ஜெபவாழ்வுதரும் ஊக்கம்; எத்தனைப் பெரியது ஜெபத்தின் மேன்மை!

குமாரனின் யுகத்தை ஜெபயுகம் எனலாம். அவரது ஜெப வாழ்வின் இரத்தினச் சுருக்கம், "மனிதர் சோர்ந்துபோகாமல் எப்பொழுதும் ஜெபம் பண்ணவேண்டும்" என்பதே.

இறைவனின் ஆசிகள் அனைத்தையும் முற்பிதாக்களின் பெயரால் யூதர் பெற்றனர். நமக்கோ அதற்கும் மேலான புதிய பெயரும், ஆசிகளும், புதிய உடன்படிக்கையும் அளவற்ற வல்லமையும், வானிலும் பூவிலும் உயர்த்தப்பட்ட உன்னதமான இறைமகனையும் பெற்றிருக்கிறோம்.

இயேசுகிறிஸ்து இறைவனைத் தந்தை என்றார். அச்சமின்றி குழந்தையைப்போல எளிமையாக, நேரடியாக தந்தைக்குரிய மரியாதையுடனும் மகிழ்ச்சியுடனும் இறைவனோடு அளவளாவினார்.

இயேசு கிறிஸ்துவின் சொல், செயல், வாழ்வெல்லாம் ஜெபத்தில் ஊறியிருந்தன. எனவே இறைவன் அவரை மங்காத மகிமையால் மறுரூபமாக்கினார். ஒரே எண்ணமும் நோக்கமும் கொண்டு நாம் ஜெபிக்கையில் வெளிப்படும் வல்லமைதான் என்னே! அவரது மகிமையே நமது ஜெபமானால் அந்த ஜெபம் இருண்ட இரவைப் பகலாக்கும், பெருங்காற்றை அமர்த்தும், எந்நிலையில் இனிமை, ஒளி, வெற்றி, நம்பிக்கையைத்தரும் உயர்தரக் கிறிஸ்தவரை உருவாக்கும்.

இயேசுவில் நாம் காணும் ஜெபத்தின் மேன்மையும் வல்லமையும் இறைவனின் சீரிய நோக்கை வெளிப்படுத்துகின்றன. குமாரனை முழுமையாக வெளிப்படுத்துவதோடு பிதாவையும் வெளிப்படுத்துகிறது.

கிறிஸ்து குழந்தையைப் போல ஜெபித்தார். குழந்தை உள்ளத்தை அவர் ஜெபத்தில் எங்கும் காணலாம். லாசருவின் கல்லறையில், “இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து : பிதாவே” என்றார் (யோ 11:41). தமது சீடர்கள் வெற்றியுடன் திரும்பியபோது, “இயேசு ஆவியிலே களிகூர்ந்து: பிதாவே!” என்றார் (லூக் 10:21). இன்னும் பல்வேறு இடங்களில் இவ்வாறே அழைக்கிறார். என்ன துணிவு! என்ன எளிமை! குழந்தையுள்ளம்தான் அத்தனை தாராளமாக, நம்பிக்கையோடு, நன்றியோடு, பாசத்தோடு, உற்சாகத்தோடு, பயபக்தியோடு பரமபிதாவுடன் உறவாட முடியும்! அப்படி ஜெபிக்க நாம் குழந்தையாக மாறவேண்டும்.

தந்தையே என்று அழைப்போமானால் தந்தைக்குரிய மரியாதையைச் செலுத்தவேண்டும். அமைதியும், அடக்கமும் அதில்

இருக்கவேண்டும். இறைவனைத் தந்தையென்றழைத்து பிள்ளைக்குரிய பரிவைப் பெறும் ஒருவன், அதே நேரத்தில், அவரது மங்காத மகிமையை மறந்து, அவரது தெய்வீகத்தை அசட்டை பண்ணக்கூடாது. அப்படிச்செய்கிறவன் இறைவனை அறியான் என்பதை நினைவிற் கொள்வோம். அவன் பிள்ளையாக இருக்க முடியாது எனலாம்.

முற்பிதாக்களும் முன்னாள் தீர்க்கரும் இறைவனின் தந்தைத்துவத்தை சிறிதளவே அறிந்திருந்தனர். அதைத் துரத்திலே கண்டு, நம்பி அணைத்துக் கொண்டார்கள் (எபி 11:13). ஏனெனில் "அவர்கள் நம்மையல்லாமல் பூரணராகாதபடிக்கு விசேஷித்த நன்மையானதொன்றைத் தேவன் நமக்கென்று முன்னதாக நியமித்திருந்தார்" (எபி 11:40).

"அவன் ஜெபம் பண்ணுகிறான்" என்பதே இறைவன் தர்சு பட்டணத்தானாகிய சவுலைக் குறித்து அனனியாவுக்குச் சொன்ன சாட்சி (அப் 9:11). ஆனால் கிறிஸ்து ஜெபம் பண்ணினாரென்பது ஆச்சரியம்! எக்காலமும் இறைவனோடு வீற்றிருக்கிறவரும் உலகங்கள், தூதர்கள், மனிதரையும் உருவாக்கினவர் அவரே. இறைவனுடைய "மகிமையின் பிரகாசமும், அவருடைய தன்மையின் சொரூபமும்" ஆனவர் அவர் (எபி 1:3). இப்படிப்பட்டவர் இறைவனுக்கு முன் வேண்டி நிற்பது மறைபொருளுக்கெல்லாம் மறைபொருள், அற்புதங்களுக்கெல்லாம் அற்புதம்!

எபிரெய நிருப ஆக்கியோன் அவரது ஜெபத்தைக் குறித்து கூறுவது: "அவர் மாம்சத்திலிருந்த நாட்களில், தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, பலத்த சத்தத்தோடும், கண்ணீரோடும் விண்ணப்பம்பண்ணி, வேண்டுதல் செய்து ...தமக்கு உண்டான பயபக்தியினிமித்தம் கேட்கப்பட்டு" (5:7). இதில் நம் கர்த்தரின் வல்லமை நிறைந்த ஜெபத்தைக் காண்கிறோம். அது வெறுமையானதல்ல. உண்மையாக வல்லமையாக இருந்தது. தம் திறனையெல்லாம் ஒன்றுதிரட்டி ஜெபித்தார் என்று சொல்லலாம். புதிய ஏற்பாட்டில் இரண்டே முறை வரும் "பயபக்தி" என்ற பதத்தை இங்கே பார்க்கிறோம். இப்படி ஜெபிக்கக் கற்றுக் கொள்வோமா?

இயேசுவுக்கு வேலை அதிகம். ஆனால் ஜெபமே அதில் முக்கியம். அதுவே அவர் நெஞ்சத்தில் நிறைந்து, உதட்டில் உதித்து, நேரத்தை நகர்த்தி, நரம்புகளை நெகிழவைத்தது. அவர் இறைவனோடு செலவிடும் நேரத்தைத் தவறவிட்டதேயில்லை. மக்களை மீட்கும் மாபெரும் பணியும் அவருக்கு ஜெபத்திற்கு அடுத்ததே. நாளெல்லாம் இறைவனுக்காக உழைத்தார். இரவெல்லாம் இறைவனோடு உறவாடினார். உழைக்கும் கரங்கள் உறவை நாடின. உறவே உழைப்பை உயர்த்தியது. ஜெபமில்லா ஊழியம் ஜெயமற்றது.

பலமுறை "அவர் ஜெபம் பண்ணினார்" என்று மட்டும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சில வேளைகளில் அவர் உதிர்த்த சொற்களோ எழுதப்பட்டுள்ளன. எப்படியானாலும் ஜெபவீரர் கிறிஸ்துவின் வாழ்வு ஜெபத்தில் முளைத்து, ஜெபத்தில் முன்னேறி, ஜெபத்திலேயே முதிர்ச்சி பெற்றது என்று நாம் தெளிவாகக் கூற முடியும்.

இயேசுவின் ஜெபங்கள் புனிதமானவை. பிதாவோடு பேசுவதும் பிதாவை வெளிப்படுத்துவதுமே அவை. தூய்மையும் வல்லமையும் நிறைந்தவை. இறைவனாக, மனிதனாக, மன்றாட்டு வீரராக அவர் விடுத்த வார்த்தைகளை வானமும் பூமியும் கவ்விக் கொண்டன எனலாம். அவை நமக்கு சிறந்ததோர் எடுத்துக்காட்டு.



# 8

# ஜெபத்தின் நோக்கம்

கிறிஸ்துவின் தலைசிறந்த ஜெபங்களிலொன்றை லூக்கா 10:21,22 இல் பார்க்கிறோம். இறைவனது இணையற்ற இரக்கத்திற்கும் பரிவுக்கும் முன் பலனற்ற ஊழியத்தைக் கண்டு பரிதவிக்கும் வேளை. இறைவன் தந்த வாய்ப்புகள், பொறுப்புகள், தயவு அனைத்தையும் தள்ளிவிட்டு நன்றியற்றுத் திரியும் மானிடரைக் கண்டு மனம் நொந்துருகும் நேரமது.

அவ்வேளையில் அவர் அனுப்பிய எழுபது சீடர்களும் அவரிடத்தில் திரும்பி வந்து ஊழியப் பலனை விவரித்தனர். அவர்கள் தாங்கள் செய்து முடித்த பணியின் சிறப்பை வியந்து, 'பரவச மகிழ்வு கொண்டாடினர். அதைக் கண்ட இயேசுவும் தம்மை மறந்து அவர்களோடு கனிகூர்ந்தார். சீடரின் வெற்றியைப் பாடி அற்புதமான ஜெபத்தை ஏறெடுத்தார்'... "பிதாவே! வானத்துக்கும் பூமிக்கும் ஆண்டவரே! இவைகளை நீர் ஞானிகளுக்கும் கல்விமான்களுக்கும் மறைத்து, பாலகருக்கு வெளிபடுத்தினபடியால் உம்மை ஸ்தோத்தரிக்கிறேன்; ஆம், பிதாவே! இப்படிச் செய்வது உம்முடைய திருவுளுத்துக்குப் பிரியமாயிருந்தது. சகலமும் என் பிதாவினால் எனக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது; பிதா தவிர வேறொருவனும் குமாரன் இன்னாரென்று அறியான். குமாரனும், குமாரன் அவரை எவனுக்கு வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ அவனுந்தவிர, வேறொருவனும் பிதா இன்னாரென்று அறியான்" (லூக் 10:21,22)

கிறிஸ்துவின் வாழ்வு பிதாவின் ரூபம். அவரே பிதாவின் "சொரூபம்" (எபி 1:3) அவரது ஏக்கமெல்லாம் இறைநோக்கை நிறைவேற்றுவதே. "எனக்குச் சித்தமானதை நான் தேடாமல், என்னை அனுப்பின பிதாவுக்குச் சித்தமானதையே தேடுகிறேன்" என்பது அவரின் அன்றாட அறிக்கை (யோ 5:30). மனிதருடைய பாவமெல்லாம் அவரை அழுத்தவே கெத்செமனேயில் கதறி அழுதார். என்றாலும் பிதாவின் விருப்பத்திற்கு முற்றிலும் விட்டுக் கொடுத்தார். கடுந்துயரால் வந்த கதறலின் நடுவிலும் இறைவனுக்குக் கீழ்ப்படிவதையே தெரிந்து கொண்டார்.

எனவே கிறிஸ்துவைப்போல ஜெபிக்க விரும்புகிறவன் இறைவனின் விருப்பத்தையே தன் ஏக்கமாக, நோக்கமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். ஜெபம் உள்ளத்திலிருந்து உதிப்பதால் ஜெபிக்கிறவனின் உள்ளம் இன்றியமையாதது. உள்ளத்தின் தூய்மையே ஜெபத்திற்கு மேன்மைதரும். "நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது" (யாக் 5:16). தூய உள்ளத்துடன் அவரைத் தேடுபவர்களே கேட்கப்படுவர். மாபெரும் மன்றாட்டு வீரர் கிறிஸ்து தூயாதி தூயவர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. ஜெபிப்பதே அவர் தொழில், ஜெப வாழ்வும், ஜெபத்தின் வல்லமையுமே அவரது உயிர்த்துடிப்பு. மொழி வல்லுநரோ, தொழில் திறமைசாலிகளோ அல்ல, கிறிஸ்துவின் சிந்தையுடையோரே ஜெப வீரராக முடியும்.

கிறிஸ்துவின் வாழ்வைத் தனதாக்கிக் கொண்டவனே இறைவனை அறியமுடியும். அவரது வல்லமையைப் பெறக்கூடும். தங்கள் பார்வையில் ஞானிகளோ, எழுத்து வல்லுநரோ, அறிஞரோ, தத்துவமேதையோ, மருத்துவரோ, சமயத்தலைவரோ இறைவனை அறியமுடியாது. நமது சிற்றறிவினால் அவரது விருப்பத்தை உணர முடியாது. சிந்தனைச் செல்வரோ, சீரிய சிறப்புடையவரோ அவரை எட்ட முடியாது. இப்படிப்பட்டவர்கள்தானே இன்னும் இருளில் தட்டுத்தடுமாறுகிறார்கள்.

இறையறிவைப்பெற இருதயம் வேண்டும்; தலையறிவு போதாது. குழந்தையின் எளிமையும் ஏக்கமுமே அவரைக் கண்டடையும். உலக ஞானத்தால் அவரைக் காண முடியாது. உள்ளத்தால்தான் உணர முடியும். பகுத்தறிவல்ல, பரம வெளிப்படுத்துல் வேண்டும். சிந்தனா

சக்தியல்ல, திறந்த உள்ளமே தேவை. உத்தம உள்ளத்தோடு தேடினால் சத்தியரைக் காணலாம்.

மனிதனின் ஞானமும், திறமையும், படிப்பறிவும் எத்தனை உயர்ந்ததென்றாலும் அவை திருமறை உண்மைகளாகாது. அறிவின் மரம் இறையறிவையல்ல, அழிவையே அளித்தது. மறுபடியும் குழந்தையைப் போல மாறினால், அவரை அடையலாம். அமர்ந்திருந்துதான் அவரைக் கர்த்தரென்று நாம் காணமுடியும். அந்த மன அமைதியை அளிப்பதே ஜெபத்தின் நோக்கம்.

எதைப் போதித்தாரோ அதையே தாமும் செய்தார். "அவர் மக்களை அனுப்பி விட்ட பின்பு, தனித்து ஜெபம் பண்ண ஒரு மலையின்மேல் ஏறி, சாயங்காலமானபோது அங்கே தனிமையாயிருந்தார்" (மத் 14:23). குணமாக்குவது, போதிப்பது போன்றவற்றைக் காட்டிலும் ஜெப ஊழியமே அவருக்கு முக்கியமாயிருந்தது. நாடிநின்ற மக்களையும், கடலில் ஓடித் தத்தளித்த சீடரையும் விட்டுப் பிதாவைத் தேடிச் சென்றார் அவர்.

அப்பத்தின் அற்புதம் கண்ட மக்கள், அவரை மன்னராக்கத்துடித்தனர். அதைவெல்ல ஜெபத்தை நாடினார். "ஆதலால் அவர்கள் வந்து, தம்மை ராஜாவாக்கும்படிப் பிடித்துக்கொண்டு போக மனதாயிருக்கிறார்களென்று இயேசு அறிந்து, மறுபடியும் விலகி, தனியே மலையின் மேல் ஏறினார்" (யோ 6:15). சோதனையை வெல்ல ஜெபமே வழி! உலகம் தரும் மங்கும் மகுடத்திற்குப் பதிலான மகிமையின் கிரீடத்தைத் தருவதே ஜெபத்தின் நோக்கம்!

உண்மையோடும் ஊக்கத்தோடும் நாம் ஜெபிக்கையில் ஆவியானவரின் நிறைவையும் வல்லமையையும் பெறுகிறோம். இயேசு ஜெபிக்கையில் வானம் திறந்ததுபோல, நாம் ஜெபம் பண்ணும் போது இறைவனோடு நெருங்கி உறவாட நம்மால் முடிகிறது. கிறிஸ்து ஜெபிக்கையில் பிதா அறிக்கையிட்டார். அதுபோல் நாம் ஜெபிக்கும்போது புத்திர சுவிகாரத்தின் ஆவியானவர் நமக்குச் சாட்சியிடுவார். அதுவே ஜெபத்தின் நோக்கம்!



# 9

# ஜெபத்தின் பலன்

இதய பாரம் அழுத்த மனம் நொந்து, சோர்வுற்ற, தளர்ந்த, தள்ளப்பட்ட, நொறுக்கப்பட்ட, வெறுக்கப்பட்ட மானிடரின் ஏக்கம் நிறைந்த உள்ளங்களுக்கு அன்பர் இயேசுவின் கனிவான அழைப்பு: "வருத்தப்பட்டு பாரஞ்சுமக்கிறவர்களே' நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன். நான் சாந்தமும் மனத்தாழ்மையுமாய் இருக்கிறேன்; என் நுகத்தை உங்கள்மேல் ஏற்றுக் கொண்டு, என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது, உங்கள் ஆத்துமாக்களுக்கு இளைப்பாறுதல் கிடைக்கும். என் நுகம் மெதுவாயும், என் சுமை இலகுவாயும் இருக்கிறது" (மத்11:8 30).

லாசருவின் கல்லறையண்டையில் அவனை உயிரோடு எழுப்புமுன் கிறிஸ்து ஜெபித்தார்: "பிதாவே, நீர் எனக்கு செவிகொடுத்தபடியினால் உம்மை ஸ்தோத்தரிக்கிறேன். நீர் எப்பொழுதும் எனக்குச் செவிகொடுக்கிறீர் என்று நான் அறிந்திருக்கிறேன்" (யோ 11:41,42). அவர் பரத்திற்கு நேராகத் தமது கண்களை ஏறெடுத்த வேளையில்தானே அவரது பாரமெல்லாம் பறந்துவிட்டது. பரமனின் உதவி புவிக்கு வந்துவிட்டது. தூதர்குழாம் செயலில் குதித்துவிட்டது. ஓ, கிறிஸ்துவைப்போல் பரத்தை இகத்திற்குக் கொண்டுவரும் ஜெபவீரர் யார்? அவரைப்போல நம்பிக்கையோடு ஜெபித்தால் நாமும் அவ்விதமான பதிலை ஐயமின்றிப் பெறுவோம்!

நெஞ்சை நெகிழவைக்கும் கிறிஸ்துவின் ஜெபத்திற்கு மற்றுமோர் எடுத்துக்காட்டு. இங்கே சின்னஞ்சிறார்களுக்காக! "அப்பொழுது, சிறு பிள்ளைகளை அவர் தொடும்படிக்கு அவர்களை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்; கொண்டுவந்தவர்களைச் சீடர்கள் அதட்டினார்கள். இயேசு அதைக் கண்டு, விசனமடைந்து: சிறுபிள்ளைகள் என்னிடத்தில் வருகிறதற்கு இடங்கொடுங்கள்; அவர்களை தடைபண்ணாதிருங்கள்; தேவனுடைய ராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது. எவனாகிலும் சிறுபிள்ளையைப் போல் தேவனுடைய ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அவன் அதில் பிரவேசிப்பதில்லையென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொல்லி, அவர்களை அணைத்துக் கொண்டு அவர்கள் மேல் கைகளை வைத்து, அவர்களை ஆசீர்வதித்தார்" (மாற் 10:13,16).

சீடர்களின் வாழ்வில் கிறிஸ்துவிற்கு வருத்தத்தை உண்டு பண்ணின, மதியற்ற, ஆவிக்குரிய எண்ணமற்ற நடக்கைகளில் இதுவும் ஒன்று. மேலான சில உண்மைகளை இங்கே காணலாம். உலகத்தாரைப் பின்பற்ற நினைத்த சீடர்கள் அடிப்படை உண்மையையே தவறவிட்டார்கள். அவர்கள் நடந்துகொண்ட முறை முற்றிலும் தவறு. கிறிஸ்துவின் போதனைக்கு அது பங்கம் விளைவித்தது. பெரியவர்கள் சிறுவராய் மாறவேண்டுமெனக் கூறி சிறார்களை ஏற்றுக்கொண்டார். சிறுவருக்கு ஜெபம் தேவை. நமது தொட்டில்களை ஜெபத்தால் நிறைப்போம். நமது ஜெபத்தினால் பிள்ளைகள் ஆசீர்வதிக்கப்படுகின்றனர். அவர்கள் அறியாப்பருவத்தைக் கடந்து தாங்களாகவே தீர்மானம் எடுக்கும் பருவம் எய்தும்வரை அவர்களை ஜெபத்தில் தாங்குவது பெற்றோரின் தலையாய கடமை. அவர்களை நல்லொழுக்கத்தில் நடத்தத் தேவையான ஞானத்திற்காகவும், கிருபைக்காகவும் ஜெபிக்க வேண்டியது அவசியம். பெற்றோரின் ஜெபமே பிள்ளைகளின் ஆசீர்வாதம்.

பிள்ளைகள் பரத்திற்கு உரியவராதும் பெற்றோரின் ஜெபத்தினால்தான். அவர்களைப் பாதுகாப்பதும் நன்னெறியில் நிற்க வைப்பதும் ஜெபமே! இயேசுவின் ஜெபத்தில் எத்தனை எளிமை, கனிவு, அன்பு, இரக்கம், சாந்தம்; அது நம்மைப் பற்றிக் கொள்ளட்டும்.

இயேசுவின் ஜெபமே பேதுருவுக்கு அவர்தான் இறைமகன் என்பதை வெளிப்படுத்திற்று: "பின்பு அவர் தமது சீடரோடுகூடத் தனித்து ஜெபம் பண்ணிக் கொண்டிருக்கையில் அவர்களை நோக்கி, ஜனங்கள் என்னை யார் என்று சொல்லுகிறார்கள் என்று கேட்டார். அதற்கு அவர்கள்: சிலர் உம்மை யோவான் ஸ்நானன் என்றும், சிலர் எலியா என்றும், வேறு சிலர் பூர்வகாலத்துத் தீர்க்கதரிசிகளில் ஒருவர் உயிர்த்தெழுந்தார் என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள். அப்பொழுது அவர் : நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்கள் என்று கேட்டார்; பேதுரு பிரதியுத்தரமாக : நீர் தேவனுடைய கிறிஸ்து என்றான்" (லூக் 9:18, 19,20). ஜெபமே மறைபொருள்களை வெளிப்படுத்தும்.

சீடர்களிடம் அவர்களுக்காக அரசு ஒன்றை ஆயத்தம் செய்கிறேன் என்றும், அவர்கள் அவரோடு அரியணையில் அமர்ந்து இஸ்ரவேலரின் பன்னிரண்டு கோத்திரங்களையும் விசாரணை செய்வார்கள் என்றும் வாக்களித்த வேளையில்தான் சீமோன் பேதுருவுக்கு இயேசு கொடுத்த எச்சரிக்கை : "சீமோனே, சீமோனே, இதோ, கோதுமையைச் சுளகினால் புடைக்கிறதுபோலச் சாத்தான் உங்களைப் புடைக்கிறதற்கு உத்தரவு கேட்டுக் கொண்டான். நானோ உன் விசுவாசம் ஒழிந்துபோகாதபடிக்கு உனக்காக வேண்டிக் கொண்டேன்; நீ குணப்பட்ட பின்பு உன் சகோதரரை உறுதிப்படுத்து" (லூக் 22:31, 32).

இறைமகனை தனக்காக ஜெபிக்கிறவராகப் பெற்ற பேதுரு பாக்கியவான்! ஆனால் சாத்தானால் புடைக்கப்படுவது பரிதாபமே! குறிப்பிட்ட சில காரியங்களுக்காக நமது ஜெபம் எவ்வளவாய் தேவைப்படுகிறது! ஒருவருக்காக தனிப்பட்ட விதத்தில் ஜெபிப்பது பெரும் பலனைத் தரும். மற்ற சீடர்களைவிட பேதுரு பல ஆபத்துக்களை எதிர்நோக்க வேண்டியிருந்ததால் இயேசு அவனுக்காக அதிகம் ஜெபித்தார். தேவை நிறைந்தவர்களுக்காக பெயர் சொல்லிக் குறிப்பாக ஜெபிக்க வேண்டும். ஆபத்துக்களில் சிக்கியிருப்போருக்காக கரிசனையோடும் ஆர்வத்தோடும் ஜெபித்தால் அதிக பலனைக் காணலாம்.

ஐயாயிரம் பேருக்கு வயிறார உணவளித்தபின், அரசராக்க முயன்ற

மக்களின் பிடியிலிருந்து விலகி ஜெபிக்கச் சென்றார். உலகத்தின் கடும் சோதனைகளை மேற்கொள்வது ஜெபமே. அந்த இரவின் ஜெபம் அதிக பலமும், மன அமைதியும் அளித்ததோடல்லாமல், கடலின் மேல் நடக்கவும் உதவியது.

மக்கள் திரளுக்கு பகிர்ந்தளிக்குமுன் அப்பமும் மீனும் ஜெபிக்கப்பட்டது. "இயேசு அந்த ஐந்து அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்ணாந்து பார்த்து, அவைகளை ஆசீர்வதித்தார்" (லூக் 9:16). ஜெபிக்கப்பட்ட நமது அன்றாட ஆகாரம் பன்மடங்காக ஆசீர்வதிக்கப்படும்!

கொன்னைவாயுடைய செவிடனைப் பார்த்தபோது பெருமூச்சு விட்டார் (மாற்7:32-35). லாசருவின் கல்லறைக்கருகிலும் ஆவியிலே கலங்கினவராய் பெருமூச்செறிந்தார் (யோ11:38). பாவத்தில் கட்டுண்டவர்களாக துக்கம், துயரம், தொல்லைகளில் வருந்திய மனுக்குலத்தைக் கண்ட இறைமகன் ஆவியிலே கலங்கி பெரும் மனவேதனையடைந்தார். அந்த வேதனை நமதாகவேண்டும். ஆவியின் முதற்பலனைப்பெற்ற நாம் ஆவியானவரோடு அழியும் மனுக்குலத்திற்காக பெருமூச்சுகளோடு ஜெபிப்போமா?

மனிதனையும், ஜெபத்தையும் பிரிக்கமுடியாது. ஒருவன் எப்படிப்பட்டவனோ அப்படியே அவனுடைய ஜெபமும் இருக்கும். அனலான எலியாவே வல்லமையாக ஜெபிக்கக்கூடும். தூயவனே தூய்மையாக ஜெபிக்க முடியும். தூய்மையாயிருக்காவிட்டால் தூய செயல்களைச் செய்யமுடியாது. அகத்தின் அழகே முகத்தில் தெரியும். எனவே உண்மையாக ஜெபிக்க உள்ளத்தைத் தூய்மையாக்குவோம்.

கிறிஸ்துவின் உன்னத ஜெபங்களுக்கு அவரின் உள்ளத் தூய்மையே அடிப்படை. மற்றவர்களைக் காட்டிலும் சோர்வின்றி, தியாகத்துடன், தூய்மையாக, எளிமையோடு ஜெபித்ததற்கு அவரின் உன்னத தூய வாழ்வே உறுதுணையாயிருந்தது.

கிறிஸ்துவின் மறுரூப அனுபவம் அவரது ஜெபவாழ்வில் ஒரு திருப்பம். அதை லூக்கா பின்வருமாறு வர்ணிக்கிறான். "..அவர்

பேதுருவையும், யோவானையும், யாக்கோபையும் கூட்டிக்கொண்டு, ஜெபம் பண்ணுகிறதற்கு ஒரு மலையின் மேல் ஏறினார். அவர் ஜெபம் பண்ணுகையில், அவருடை முகரூபம் மாறிற்று, அவருடைய வஸ்திரம் வெண்மையாகிப் பிரகாசித்தது. அன்றியும் மோசே எலியா என்னும் இரண்டுபேரும் மகிமையோடே காணப்பட்டு, அவருடனே உரையாடி, அவர் எருசலேமிலே நிறைவேற்றப்போகிற அவருடைய மரணத்தைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள்" (லூக் 9:28,31).

அவருக்கு நெருக்கமான மூன்று சீடர்கள் ஜெபத்திற்குத் தெரிந்தெடுக்கப்பட்டனர். ஒரு சிலரே ஆவிக்குரியவற்றில் நாட்டமுடையவர்கள். அவர்கள் கூட இரவு ஜெபத்தில் மூர்ச்சித்துப் போயினர். அவர் ஜெபிக்கத்தான் சென்றார். ஆனால் ஜெபிக்கையில் அவர் முகரூபம் மாறியது, உடை மின்னியது. ஜெபத்தைப் போல நம்மை மாற்றக்கடியது எதுவுமில்லை. சோர்ந்து, துவண்டு போயிருக்கும் நமக்கு பரலோக மகிமையையும், மாட்சியையும் கொண்டு வருவது ஜெபமே. ஜெபத்தினால் நிறைந்த அந்த மறுரூபமலைக்குத் தூயமலை என்று பெயரிடுகிறான் பேதுரு (2 பேதுரு 1:18).

மும்முறை குமாரனைக் குறித்து பிதாவானவர் அறிக்கையிடுகிறார். முதலாவது திருமுழுக்கு பெறுகையில், இரண்டாவது மறுரூபமலையில், இவ்விரண்டு வேளைகளிலும் அவர் ஜெபித்துக் கொண்டிருந்தார். மூன்றாவது முறை மகிமையான வேளையில் அல்ல, மரணத் தருவாயில், காரிருளும் தாங்கமுடியா சோர்வும் மூடிய நேரம். தனது கோர முடிவையும் மகிமையான உயிர்த்தெழுதலையும் குறித்து சீடர்களுக்கு முன்னறிவித்துவிட்டு ஆத்மபாரத்தைத் தாங்க முடியாமல் கதறிய வேளை, "இப்பொழுது என் ஆத்துமா கலங்குகிறது, நான் என்ன சொல்லுவேன். பிதாவே இந்த வேளையினின்று என்னை இரட்சியும் என்று சொல்வேனோ; ஆகிலும், இதற்காகவே இந்தவேளைக்குள் வந்தேன். பிதாவே, உமது நாமத்தை மகிமைப்படுத்தும் என்றார். அப்பொழுது, மகிமைப்படுத்தினேன், இன்னமும் மகிமைப்படுத்துவேன் என்கிற சத்தம் வானத்திலிருந்து உண்டாயிற்று" (யோ12:27,28). துயருற்ற, வேதனை வேளையில் ஜெபம் எத்தனை பலனிந்தது!

எதிரிகளை நேசிக்க வேண்டும், நமக்கு விரோதமாகத் தீமை செய்தவர்களை மன்னிக்க வேண்டுமென்று சொல்லிக் கொடுத்ததை கோரச்சிலுவையிலும் செய்து காட்டினார். "அப்பொழுது இயேசு: பிதாவே, இவர்களுக்கு மன்னியும், தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே என்றார்" (லூக் 23:34). அந்தக் கடும்பாடுகளின் நடுவிலும், அவரைச் சிலுவையில் அறைந்தவர்கள் எள்ளி நகையாடும் வேளையிலும் மன்னிப்பின் மாண்பை வெளிப்படுத்தியது ஜெபமே.

கிறிஸ்துவின் மற்றொரு சிலுவை ஜெபத்தைப் பார்ப்போம். கோர, பயங்கரமான இருள் சூழ்ந்த நேரத்தில், கசப்பான பாத்திரத்தில் பானம் பண்ணும்வேளை உள்ளத்தைத் தொடும் ஒரு ஜெபம்: "என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்?" (மாற்15:34). யூதாஸ் காரியோத்தின் வஞ்சக முத்தத்தைவிட இது அவரது இதயத்தைப் பிளந்தது. வேறெந்தத் துன்பங்களையும் தாங்கிக்கொள்ளலாம். ஆனால் தந்தையின் முகம் மறைக்கப்பட்டதை அவரால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. இருப்பினும் அந்த சோகத்தின்போதும் ஜெபித்தார். அவ்வேளையிலும் பிதாவை அசைத்தது ஜெபம் (மத் 27:51-54). ஆம் குழந்தையின் நம்பிக்கையோடு தமது ஓட்டத்தை முடித்தார். "பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன் என்று மகா சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னார்; இப்படிச் சொல்லி, ஜீவனை விட்டார்" (லூக் 23:46).



# 10

# கர்த்தருடைய ஜெபம்

"கர்த்தர் ஜெபம்" எனப் பொதுவாய் அழைக்கப்படும் மாதிரி மன்றாட்றொன்றினை கிறிஸ்து கற்பித்திருக்கிறார். இந்த முழுமையான முன்மாதிரியில் ஜெபத்தின் வெளிவரையறை மட்டுமே உண்டு. நுணுக்கங்களை விரித்து, விரிவாக ஜெபிக்கலாம். அதின் கோட்பாடுகளும், வடிவமும் முழுமையானவையே. ஆயினும் நம் தேவைக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப அதில் விடுபட்ட இடங்களை நிரப்பி ஜெபிக்கவேண்டும்.

பரிசுத்தர் பயன்படுத்தவேண்டிய பயனுள்ள ஜெபமது. ஜெபத்தில் வார்த்தைகளுக்கு உரிய இடமுண்டு. வார்த்தைகளற்ற மவுன ஜெபம் போதாது. அவை ஒரு வேளை உன்னதமானதாகப் போற்றப்பட்டாலும் நம் அனுதினத் தேவைகளுக்கு பயனற்றது. மாம்சமும் இரத்தமும் இருந்தால்தான் ஆவியினால் பயனுண்டு. அதேபோல நாமும் சரியான வார்த்தைகளை உச்சரித்து மன்றாட்டிற்கு உயிரூட்ட வேண்டும்.

சீடர், "ஆண்டவரே எங்களுக்கு ஜெபிக்கக் கற்றுத்தாரும்" என்றதால், "கர்த்தர் ஜெபம்" கற்றுக் கொடுக்கப்பட்டது (லூக் 11:1). கிறிஸ்து மலைப்பிரசங்கத்தில் ஜெபத்தைக் குறித்து கற்பித்த சத்தியத்தின் சுருக்கம் இதில் அடங்கியுள்ளது. அது பரத்திலிருக்கும் நமது தந்தையின் விடாப்பிடியாய் வேண்டிக் கொள்ளும் மேன்மையான மன்றாட்டு.

இத்தலைப்பின்றி எந்த ஜெபமும் முழுமையற்றது. இதுவே ஜெபத்தின் துவக்கமும் முடிவும். தேவன் நம் தகப்பன் என்பதே ஜெபத்திற்கு மதிப்பையும் மாறா நம்பிக்கையையும் தருகிறது.

இறைவனை மகிமைப்படுத்துவதே ஜெபத்தின் முதற்பணி. இறையரசு வருவதும் நிலைநிறுத்தப்படுவதும் அவர் மகிமையடைந்த பின்னரே. உண்மையாக தேவனை உயர்த்தும் நபரே அவர் வருகையை வரவேற்பர், அதற்காக உழைக்கவும், ஜெபிக்கவும் கொடுக்கவும் விரும்புவர். ஜெபப் பள்ளியில்தான் கிறிஸ்துவின் மாணாக்கருக்கு, தேவனை உயர்த்தவும், அவருக்காக உழைக்கவும், பரத்தில் செய்யப்படுவதுபோல, மகிழ்ச்சியுடன் முற்றிலும் அவர் விருப்பம்செய்யவும் தெளிவாய்க் கற்றுக் கொடுக்கப்படும்.

தேவனுக்கு மிகுந்த ஆதாயமும் ஆனந்தமும் உண்டாவது ஜெபத்தினால்தான். ஜெபமில்லையேல் அவர் பெயர் அவமதிக்கப் படுகிறது; அவர் அரசாட்சி தடுக்கப்படுகிறது; அவர் விருப்பம் பரத்தில் செய்யப்படுவதுபோல பூவிலும் செய்யப்படவேண்டும். இகத்தில் அவர் விருப்பம் செய்யப்படின், இகம் பரமாகும். இடைவிடா ஜெபம் பரத்தைப்போல் பூவிலும் அவர் விருப்பம் நிறைவேறச் செய்யும்.

கடின உழைப்பால் கிட்டும் அனுதின ஆகாரம், ஆசீர்வதிக்கப்படுவது ஜெபத்தினால்தான். பாவ மன்னிப்பும் ஜெபத்தின் மூலமே. தமக்கெதிராக பாவம் செய்தவர்களை மன்னிப்பவர்தாம், பாவ மன்னிப்பிற்காக ஜெபிக்க முடியும். எதிரியை நேசிப்பது. அவர்களுக்காக ஜெபிப்பது, அன்புடன் ஆசீர்வதிப்பது, நமக்கு எதிராக என்ன செய்திருந்தாலும் மன்னிப்பது இவையனைத்தும் அவ்வேண்டுகோளில் அடக்கம்.

“எங்களை சோதனைக்குள் பிரவேசிக்கப் பண்ணாதேயும்” என ஜெபிப்பது நல்லது. அதே வேளையில், விழிப்புடன் சோதனைக் காரனையும் சோதனையும் எதிர்த்துப் போராட மறக்கக்கூடாது.

மேற்கூறிய அனைத்தும் கிறிஸ்துவின் மாதிரி ஜெபத்தில் உண்டு. எனினும் அதை விமர்சித்து, விரிவாக்கி, விளக்குகையில் விவரமாக அறிந்து கொள்ளலாம். எண்ணற்றோர் தங்கள் சிறுவயதில்

கற்றுக்கொண்ட, பிள்ளைகளும் புரிந்துகொண்டு பயன்பெறக்கூடிய எளிய ஜெபமது. உலகில் மிகச்சிறந்த ஜெபமது. ஞானியும் மூடனும் அதைப் புரிந்துகொள்ளலாம். இதன் அழகிய அரிய வார்த்தைகள் நாம் ஆறுதலடையவும், ஆதரவு பெறவும், ஆழ்ந்து கற்றுக் கொள்ளவும் உதவுகின்றன.

நாம் அவரின் அடிச்சுவடுகளைப் பின்பற்ற அவர் நம் முன் சென்றிருக்கிறார். ஜெபிப்பதில் ஈடுஇணையற்ற தலைவரவர். “ஆண்டவரே நீர் ஜெபித்தது போல், எங்களுக்கும் ஜெபிக்கக் கற்றுத்தாரும்.” யூத குருக்களின் அடுக்குமொழி ஜெபத்தைவிட, சீடர் கற்றுக்கொண்ட “கர்த்தர் ஜெபம்” முற்றிலும் வேறுபட்டது. அடிப்படை உண்மைகளை உள்ளடக்கியது. எத்தனை எளிது, இலகுவானது! இதைவிட எளிய ஆனால் பொருட்செறிவு நிறைந்த ஜெபம் வேறுண்டோ? இது தன்னிகரற்ற ஜெபம்.

இந்த ஜெபம் சீடருக்கு மட்டுமல்ல, நமக்கும்தான். ஆரம்பக் கல்விக்கு அரிச்சுவடியும், பட்டப்படிப்புக்கு பல்கலைக்கழகமும் அதுவே. தேவைகள் நிறைவுற, பாவங்கள் மறைய ஏறெடுக்கப் படும் ஜெபமது. அது பிறர் நலம் நாடும் அற்புத மன்றாட்டு. பல்கலைக்கழகம் சென்றுவிட்டாலும் அரிச்சுவடியை மறக்க முடியுமா? அடித்தளமே அதுதான். அதை விரித்து வர்ணம் தீட்டி கற்பனைத்திறனால் வெவ்வேறு துறைகளை அதில் கற்றுக் கொள்கிறோம். அதுபோல கிறிஸ்துவின் சீடரும் கர்த்தரின் ஜெபத்தைப் புறக்கணித்து பூரணமடைய முடியாது. அதையே அடித்தளமாக்கி ஜெப வாழ்வில் உயரவேண்டும். மன்றாட்டில் மேலோங்க வேண்டும்.

கர்த்தரின் ஜெபத்தை சிறுவயதிலேயே கற்றிருந்தாலும் கிறிஸ்தவ வாழ்வின் ஒவ்வொரு படியிலும் அது ஏற்றது. ராஜரீக ஆசாரியராகிய நாம் மனிதருக்காக தேவன் முன்னின்று மன்றாடுவது முறையானது. ஆவியானவரால் தேவனோடு ஒன்றிணைந்து, தேவனுக்கு உண்மையுள்ளவர்களாக வாழ்விலும் ஜெபத்திலும் தேவனை மகிமைப்படுத்துவோம்.



# 11

# கிறிஸ்துவின் மன்றாட்டு

மன்றாட்டு என்றால் என்னவென்பதை முதல் அத்தியாயத்திலேயே கண்டோம். யோவான் நற்செய்தி நூல் பதினேழாம் அத்தியாயத்திலுள்ள கிறிஸ்துவின் மன்றாட்டை இங்கு கவனிப்போம்.

பரம தந்தைக்குக் கீழ்ப்படிந்து மன்றாட்டு ஊழியத்தில் கிறிஸ்துவோடு நாமும் ஈடுபட வேண்டும். அவர் தம் சீடருக்காக எவ்வளவு கனிவோடு, உள்ளத்தை ஊற்றி மன்றாடுகிறார்! "நான் அவர்களுக்காக வேண்டிக் கொள்ளுகிறேன்; உலகத்துக்காக வேண்டிக்கொள்ளாமல், நீர் எனக்குத் தந்தவர்களுக்காக வேண்டிக் கொள்ளுகிறேன்" (வச9). இறை மக்களுக்காக மன்றாட ஓர் சீரிய சான்று! இறையரசிற்காக ஜெபிப்பதே அது. இறைமக்களின் தூய்மைக்கும், மகிமைக்கும், ஒருமைக்கும் ஜெபிக்க வேண்டும். அவர்களிடையே ஒருமனத்திற்காக கிறிஸ்து எவ்வளவாய் ஏங்கினார்! இறைமக்களின் சபை பாகுபாடு, இனவேற்றுமை அவரை மீண்டும் சிலுவையில் அறைந்து மனமொடியச் செய்கிறது. இந்த மன்றாட்டின் கருப்பொருள் ஒருமைப்பாடே! "நாம் ஒன்றாயிருக்கிறதுபோல அவர்களும் ஒன்றாயிருக்கும்படி" (வச 22). கிறிஸ்துவின் மூலம் ஆவியில் ஒன்றாவது சபை பெறும் பெருஞ்சொத்து.

முதலாவது அவர் தமக்காக ஜெபிக்கிறார். கண்ணீரோடல்ல, கெம்பீரத்தோடு, பாவப்பாரமும் காரிருளின் கோரமும் அவரைப் பற்றாத வேளையது. பிதாவை மகிமைப்படுத்த தம்மை மகிமைப்படுத்தும்படி ஜெபிக்கிறார். நமது அர்ப்பணிப்பும் உண்மையும் மன்றாட்டு ஊழியத்திற்கு மிகவும் தேவை. அவையே நமக்கு நம்பிக்கையைத் தரும். இவ்வகை மன்றாட்டு மகிமையானவைகளைச் செய்யும். இம்மன்றாட்டின் மூலம் உரிய உண்மைகள், மறைபொருள்கள், அனுபவங்களைக் குறித்து அவர் கூறுவது: "ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன். என்னுடையவைகள் யாவும் உம்முடையவைகள், உம்முடையவைகள் என்னுடையவைகள்; அவர்களில் நான் மகிமைப்பட்டிருக்கிறேன். நீர் என்னிடத்தில் வைத்த அன்பு அவர்களிடத்திலிருக்கும்படிக்கும், நானும் அவர்களிலிருக்கும் படிக்கும், உம்முடைய நாமத்தை அவர்களுக்குத் தெரியப்படுத்தினேன்; இன்னமும் தெரியப்படுத்துவேன். பிதாவே, உலகம் உண்டாகிறதற்கு முன்னே உம்மிடத்தில் எனக்கு உண்டாயிருந்த மகிமையினாலே இப்பொழுது நீர் என்னை உம்மிடத்திலே மகிமைப்படுத்தும்" (வ. 3,10,26,5).

இவ்வேளையில் நம்மை நாமே ஆராய்ந்து பார்ப்போம். இறைவனை தனிப்பட்ட விதத்தில் அறிந்திருக்கிறோமா? அவரை ருசித்திருக்கிறோமா? அவரை நம் இதய தெய்வமாக ஏற்றிருக்கிறோமா? இரட்சிப்பின் அனுபவம் நமக்குண்டா? கிறிஸ்து நம் மூலம் மகிமைப்படுகிறாரா? இறைவன் உயர்த்தப்படுவதையும் அவர் அளிக்கும் மேன்மையையும் மட்டுமே நாம் நாடுகிறோமா? இறையரசே நமது நோக்கமாயிருக்கிறதா?

தமது தந்தையோடு தமது சீடர்களை எவ்வளவாய்ப் பிணைக்கிறார்! அவர்களே அவரது மன்றாட்டு மையம். "நீர் உலகத்தில் தெரிந்தெடுத்து எனக்குத் தந்த மனிதருக்கு உம்முடைய நாமத்தை வெளிப்படுத்தினேன். அவர்கள் உம்முடையவர்களாயிருந்தார்கள். அவர்களை எனக்குத் தந்தீர், அவர்கள் உம்முடைய வசனத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். நீர் எனக்குத் தந்தவைகௌளல்லாம் உம்மாலே உண்டாயினவென்று இப்பொழுது அறிந்திருக்கிறார்கள். நீர் எனக்குக் கொடுத்த வார்த்தைகளை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்; அவர்கள்

அவைகளை ஏற்றுக்கொண்டு, நான் உம்மிடத்திலிருந்து புறப்பட்டு வந்தேன் என்று நிச்சயமாய் அறிந்து, நீர் என்னை அனுப்பினீர் என்று விசுவாசித்திருக்கிறார்கள். நான் அவர்களுக்காக வேண்டிக் கொள்ளுகிறேன்; உலகத்துக்காக வேண்டிக் கொள்ளாமல், நீர் எனக்குத் தந்தவர்களுக்காக வேண்டிக் கொள்ளுகிறேன், அவர்கள் உம்முடையவர் களாயிருக்கிறார்களே. என்னுடையவைகள் யாவும் உம்முடையவைகள், உம்முடையவைகள் என்னுடையவைகள்; அவர்களின் நான் மகிமைப் பட்டிருக்கிறேன்" (வச 6,10).

தமது சீடர்கள் பாதுகாக்கப்பட ஜெபித்தார். அவர்கள் தெரிந்தெடுக்கப்பட்டு, அழைக்கப்பட்ட பாத்திரங்கள் மட்டுமல்ல. இறைவனின் வல்ல கரங்களால் காக்கப்பட வேண்டியவர்கள். "நான் இனி உலகத்திலிரேன். இவர்கள் உலகத்திலிருக்கிறார்கள்; நான் உம்மிடத்திற்கு வருகிறேன். பரிசுத்தபிதாவே, நீர் எனக்குத் தந்தவர்கள் நம்மைப்போல ஒன்றாயிருக்கும்படிக்கு. நீர் அவர்களை உம்முடைய நாமத்தினாலே காத்துக்கொள்ளும்" (வச 11).

தூய பிதாவானவர் அவர்களைத் தமது வல்லமையால் தூய்மையாக காக்கவேண்டுமென்று வேண்டுகிறார். இவ்வுலக அசுத்தம், அநீதி, அக்கிரமம், அழிவு அனைத்தினின்றும் காக்கப்படவேண்டும். பரத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட அல்ல, இப்புவியின் வெற்றி தோல்வி, கண்ணீர் களிப்பு, புரட்டு புகழ்ச்சி நடுவில் ஒளியாகத் திகழ ஜெபித்தார். "நீர் அவர்களை உலகத்திலிருந்து எடுத்துக் கொள்ளும்படி நான் வேண்டிக்கொள்ளாமல், நீர் அவர்களைத் தீமையினின்று காக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்" (வச 15).

பாவத்தின் பிடியிலிருந்து, அதன் அழிவு, அகோரம், ஆளுகையினின்று அவர்கள் மீட்கப்படவேண்டும் எனக் கேட்கிறார். மற்றொரு மொழிபெயர்ப்பில் "தீயவனிடமிருந்து" என்றிருக்கிறது. அவனுடைய பல்வேறு சோதனை, சதிகளினின்று அவர்கள் காக்கப்பட்டு அவருக்கென்று வாழவேண்டும். பரத்திற்கென்று பாதுகாக்கப்பட வேண்டும். 'கடைசிக்காலத்திலே வெளிப்பட ஆயத்தமாக்கப்பட்டிருக்கிற இரட்சிப்புக்கு ஏதுவாக விசுவாசத்தைக் கொண்டு தேவனுடைய

பலத்தினாலே காக்கப்பட்டிருக்கிற உங்களுக்கு அந்தச் சுதந்திரம் பரலோகத்தில் வைக்கப்பட்டிருக்கிறது" (1 பேதுரு 1:5).

அவர் நம்மைப் பிதாவின் கரங்களில், மடியில், இதயத்தில் வைக்கிறார். அவரது செட்டைகளின்கீழ் அடைக்கலமாக, அவரது நிழலில் தங்கி, அவருக்கருகில் பாதுகாப்பாக நம்மை வைக்க இறைவனை வேண்டுகிறார். பரம தந்தையின் கோலும் தடியுமே நம்மை ஆற்றித் தேற்றி, அரவணைத்து ஆதரவளிக்கும். அதுவே நமது அடைக்கலம், பெலன், வழிகாட்டி.

சீடர்களை இவ்வுலகத்திலிருந்து எடுத்துக்கொள்ளும்படி அல்ல. இவ்வுலகின் தீமையினின்று காக்கவே வேண்டுகிறார். இன்றைய உலகுதீமையின் மறுரூபம்தான். அதுநம்மை மயக்கி, மழுக்கி மோசம் போக்குகிறது. அவரது சீடர்களோ அதன் பகட்டிலிருந்தும், பாரங்களிலிருந்தும் பிரித்தெடுக்கப்பட்டவர்கள். மண்ணான இவ்வுலகு பொன்னாகவும், கல்லறை வைரக்கல்லாகவும் காட்சியளித்து மக்களை வஞ்சிக்கிறது. கிறிஸ்து இவைகளால் கறைபடாமலிருந்ததுபோல அவர்களும் இருக்க வேண்டும். மாம்ச இச்சைகளால் மாசுபடாமலும், வேண்டாத உறவுகளினால் வேதனைப்படாமலும், கிறிஸ்துவைப்போல உலகத்தின் வெறுப்பையும் எதிர்ப்பையும் எதிர்நோக்கவேண்டும். "நான் உலகத்தானல்லாததுபோல அவர்களும் உலகத்தாரல்ல; ஆதலால் உலகம் அவர்களைப் பகைத்தது" (வச 14).

அவரைப் பரிகசித்து, பகைத்து சிலுவையில் அறைந்த உலகம் அவரது சீடரையும் அவ்வாறே நடத்தும். ஏனெனில் அவரைப் போல அவர்களும் இவ்வுலகத்தினின்று வேறுபட்டிருக்கிறார்கள். "உலகம் உங்களைப் பகைத்தால், அது உங்களைப் பகைக்கிறதற்கு முன்னே என்னைப் பகைத்ததென்று அறியுங்கள். நீங்கள் உலகத்தாரா யிருந்தால், உலகம் தன்னுடையதைச் சிநேகித்திருக்கும்; நீங்கள் உலகத்தாராயிராதபடியினாலும், நான் உங்களை உலகத்திலிருந்து தெரிந்து கொண்டபடியினாலும், உலகம் உங்களைப் பகைக்கிறது" (யோ15:18,19). அப்படியானால் அவர்கள் அவரது முன்மாதிரியைப் பின்பற்றவேண்டும். அதற்காகவே மன்றாடுகிறார்.

தம் சீடர்களின் ஒற்றுமையை அவர் வெகுவாய் சிந்தித்தார். அதற்காக பிதாவிடம் மன்றாடுகிறார். “பரிசுத்த பிதாவே, நீர் எனக்குத் தந்தவர்கள் நம்மைப்போல ஒன்றாயிருக்கும்படிக்கு, நீர் அவர்களை உம்முடைய நாமத்தினாலே காத்துக்கொள்ளும்” (வச 11).

வருங்காலங்களில் அவரைப் பின்பற்றப்போகும் மக்கள் திரளை எண்ணி அவர்களுடைய ஒற்றுமைக்காகவும் வேண்டுகிறார்: “அவர்கெளல்லாரும் ஒன்றாயிருக்கவும், பிதாவே, நீர் என்னை அனுப்பினதை உலகம் விசுவாசிக்கிறதற்காக, நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கிறதுபோல அவர்களெல்லாரும் நம்மில் ஒன்றாயிருக்கவும் வேண்டிக் கொள்கிறேன். நாம் ஒன்றாயிருக்கிறது போல அவர்களும் ஒன்றாயிருக்கும்படி, நீர் எனக்குத்தந்த மகிமையை நான் அவர்களுக்குக் கொடுத்தேன். ஒருமைப்பாட்டில் அவர்கள் தேறினவர்களாயிருக்கும்படிக்கும், என்னை நீர் அனுப்பினதையும், நீர் என்னில் அன்பாயிருக்கிறதுபோல அவர்களிலும் அன்பாயிருக்கிற தையும் உலகம் அறியும்படிக்கும். நான் அவர்களிலும் நீர் என்னிலும் இருக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்” (வச 21-23).

சீடரின் ஒற்றுமை அவரின் ஏக்கம். ஒற்றுமை இல்லாததால் சபை வரலாற்றில் எத்தனை வடுக்கள்! சண்டை சச்சரவு, ஏற்றத்தாழ்வு, இனவேற்றுமை யாவும் சபைக்குள் கேவலம்! காலகாலமாய் தமது சரீரம் இப்படிக் கிழித்தெறியப்பட்டு, குருதி சிந்த நேரிடும் என்று அறிந்தே அப்படி ஜெபித்தார் போலும். ஒற்றுமையே அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட மேலான சொத்து. சண்டையும் சச்சரவும் சாத்தானின் ஆயுதம். சபையின் அவமானச் சின்னம், நமது தோல்வியின் அடையாளம், பலவீனத்தின் பரிதாபம்!

நமது ஒற்றுமையே உலகிற்கு நாம் தரும் நற்செய்தி. அதற்காக கிறிஸ்துவைப்போல ஜெபிக்கிறோமா? அதனால் வரும் வல்லமை, மகிமை, சமாதானம், நலனுக்காக ஏங்குகிறோமா? அவர்களுக்காக நான் என்னைத்தானே பரிசுத்தமாக்குகிறேன்” (வச 17, 19).

முற்றும் அர்ப்பணிப்பதே அவ்வர்களின் தூய்மை. அவரது

மன்றாட்டே அதற்கு வழி. ஆவியோடும் உண்மையோடும் ஜெபத்தில் தரித்திருப்பதே நம்மை மேன்மைக்கு நடத்திச் செல்லும். "இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள். சமாதானத்தின் தேவன் தாமே உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்குவாராக. உங்கள் ஆவி ஆத்துமா சரீரம் முழுவதும், நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வரும் போது குற்றமற்றதாயிருக்கும்படி காக்கப்படுவதாக. உங்களை அழைக்கிறவர் உண்மையுள்ளவர், அவர் அப்படியே செய்வார்" (1 தெச 5:17, 23,24).

கிறிஸ்துவைப்போல் நாமும் தூய்மையாக்கப்பட்டால்தான் நமது அழைப்பையும் பொறுப்பையும் நாம் நிறைவேற்ற முடியும். பிதா அவரை அனுப்பியதுபோல அவர் நம்மையும் இவ்வுலகிற்குள் அனுப்பியிருக் கிறார். அவரைப்போல வாழ்ந்து பிதாவுக்கே மகிமையை அளிக்க அவர் எதிர்பார்க்கிறார்.

"பிதாவே, உலகத்தோற்றத்துக்கு முன் நீர் என்னில் அன்பாயிருந்தபடியினால், நீர் எனக்குத் தந்த என்னுடைய மகிமையை நீர் எனக்குத் தந்தவர்கள் காணும்படியாக, நான் எங்கே இருக்கிறேனோ அங்கே அவர்களும் என்னுடனே கூட இருக்க விரும்புகிறேன்" என்பதே அவருடைய இறுதி மன்றாட்டு (வச 24). அவரோடு நாம் மகிமையை அனுபவிக்க வேண்டுமென்று எவ்வளவாய் விரும்புகிறார்! அவரது அன்பின் அழைப்பிற்கு நமது பதிலென்ன? அவரோடு மன்றாடுபவரே அவரது மகிமையைக் காணமுடியும்.

அவர் இந்த மன்றாட்டு ஊழியத்தை வெற்றிகரமாக முடித்தார். "பூமியிலே நான் உம்மை மகிமைப்படுத்தினேன்; நான் செய்யும் படி நீர் எனக்கு நியமித்த கிரியையைச் செய்து முடித்தேன்" (வச 4).

இவ்வுலக அரும்பொருட்கள் எதுவும் இந்த மன்றாட்டு ஊழியத்தின் மேன்மைக்கு ஈடாகாது. இவ்வுன்னத ஊழியத்தில் நாம் ஈடுபடுவோமா?



# 12

# கிறிஸ்துவின் விண்ணப்பம்

கிறிஸ்துவின் மன்றாட்டு பரந்துவிரிந்து, உணர்வுகள் நிறைந்து, தமது சபைக்காகப் பரிந்து பேசுவதாக இருந்தது. அமைதியும் உறுதியும், உருக்கமும் இரக்கமும், எளிமையும் கெம்பீரமும் அதில் இருந்தன. விண்ணுலக மன்னனாக மண்ணுலக மாந்தருக்காக மன்றாடினார். உதய சூரியனைப்போல அது உன்னதத்தில் தோன்றி மகிமையில் ஒளிர்ந்து உலகின் மீது ஆசிகளைப் பொழிந்தது. அருவிகள் நீரோடைகளாக நிறைந்து, வழிந்து நன்மைகளை வாரி வழங்கியது.

ஆனால் அவருடைய விண்ணப்பமோ முற்றிலும் வேறுபட்டது! அது கெத்செமனேயின் கோரக் கூக்குரல். பதற்றமும், கலக்கமும் ஏக்கமும் கண்ணீருமே அக்காட்சி. பூவுலகின் பாவப்பாரம் அழுத்த சோர்வின் எல்லைக்கோட்டை கடந்து செல்கிறார். கசப்பான பானத்தைப் பருகவேண்டும். மகா துக்கமும், மிகுந்த வியாகுலமும் அவரை மண்டியிடச் செய்தன. பலமற்ற அவருடைய உடலிலிருந்து குருதி வியர்வையாக வெளிப்படுகிறது. எதிராளி களிகூறுகிறான். நகரம் விழாக் கொண்டாடுகிறது.

சாத்தானின் சத்துவமும், அந்தகாரத்தின் கோரமும் வெளிப்படப் போகும் உச்சக்கட்டம். அவன் தன் படைகளை ஒன்றுதிரட்டி இறுதிப்

போரில் குதிக்க வந்திருந்தான். பூவினைக் கைவசமாக்கும் கடைசிப் போராட்டம் அது. அதுவரை அங்கே அவரை வழிநடத்தி வந்தவர் ஆவியானவரே. ஆனால் அந்நேர மட்டும் உடனிருந்த ஆதரவாளர் இப்பொழுது அவரைத் தனியே விட்டுவிட்டார். மரணத்துக்கேதுவான துக்கம் அவரைச் சூழ்ந்துவிட்டது. திகிலடையவும் மிகவும் வியாகுலப்படவும் தொடங்கினார் (மாற்கு 14:33,34)

நரகத்தின் பயங்கரம் அவரை மூடியது. உலகத்தின் பாவப் பாரம், ஆக்கினை அவரை அழுத்திற்று. நண்பரின் உதவியை நாடமுடியாத நேரம் அது. அவர்களால் புரிந்துகொள்ள முடியாத பாடு. உடன் வந்தவர்கள் உறங்கிப் போனார்கள். தந்தையின் முகமோ தென்படவில்லை. அவர் அன்பின் குரலோ கேட்கவில்லை. வாழ்வெங்கும் இணைபிரியாதிருந்த ஆவியானவரோ இப்பொழுது உடனில்லை. தன்னந்தனியே இறைவனின் கோபாக்கினையைத் தாங்க வேண்டும். எதிரியின் உக்கிரத்தை எதிர்கொள்ள வேண்டும். அதன் விவரத்தை லூக்கா 22:39-46இல் காண்கிறோம்: "பின்பு அவர் புறப்பட்டு, வழக்கத்தின்படியே ஒலிவமலைக்குப் போனார்; அவருடைய சீடரும் அவரோடேகூடப் போனார்கள். அவ்விடத்தில் சேர்ந்தபொழுது அவர் அவர்களை நோக்கி: நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு ஜெபம் பண்ணுங்கள் என்று சொல்லி, அவர்களை விட்டுக் கல்லெறிதூரம் அப்புறம்போய், முழங்கால்படியிட்டு; பிதாவே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; ஆயினும் என்னுடைய சித்தத்தின் படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார். அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரைப் பலப்படுத்தினான். அவர் மிகவும் வியாகுலப்பட்டு, அதிக ஊக்கத்தோடே ஜெபம் பண்ணினார். அவருடைய வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாய்த் தரையிலே விழுந்தது. அவர் ஜெபம் பண்ணி முடித்து, எழுந்திருந்து, தம்முடைய சீடரிடத்தில் வந்து, அவர்கள் துக்கத்தினாலே நித்திரை பண்ணுகிறதைக் கண்டு: நீங்கள் நித்திரை பண்ணுகிறதென்ன? சோதனைக்குட்படாதபடிக்கு, எழுந்திருந்து ஜெபம் பண்ணுங்கள் என்றார்".

கெத்செமனே விண்ணப்பமே கல்வாரியின் மகிமையைத் தருகிறது. சிலுவையில் அவர் ஏறெடுத்த ஜெபங்களில் பெலவீனத்தையும், துக்கத்தையும், வேதனையையும், தனிமையையும், அமைதி, நம்பிக்கை, அர்ப்பணிப்பு மேற்கொள்வதைக் காண்கிறோம்.

இயேசு கிறிஸ்துவின் இந்த ஆழமான, உள்ளத்தை உருக்கும் விண்ணப்பத்தைப்போன்று வேறெந்த தீர்க்க தரிசியும் ஆசாரியனும், அதிபதியும், மன்னனும் வேண்டினதில்லை, எந்த சபையும் ஜெபாலயமும் கண்டதில்லை. இதுவே இறைவனின் விருப்பத்தில் உருவாகி, மகிமையில் மறைந்து, அவருக்கு நறுமணமூட்டியது.

இதுவரைக்கும் அவர் கற்றுத்தந்தது, கேளுங்கள் கொடுக்கப்படும் என்பதே. "நீங்கள் என்னிலும், என் வார்த்தைகள் உங்களிலும் நிலைத்திருந்தால், நீங்கள் கேட்டுக் கொள்வதெதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும்" (யோ15:7). விடாப்பிடியாக வேண்டிய கானானிய பெண்ணிடம் "ஸ்திரியே, உன் விசுவாசம் பெரிது; நீ விரும்புகிறபடி உனக்கு ஆகக்கடவது" (மத் 15:28). சீடருக்காக மன்றாடும் வேளையிலும் "நான் விரும்புகிறேன்" என்றார் (யோ 17:24).

ஆனால் இங்கோ, "பிதாவே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; ஆயினும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது" என்கிறார் (லூக்22:42). ஏன் இந்த மாற்றம்? அது தான் விண்ணப்பத்திற்கும் மற்ற ஜெபங்களுக்கும் உள்ள வேறுபாடு. கண்ணீரும் கீழ்ப்படிதலும் அதில் கலந்துவிட்டது.

நமது தேவையொன்று அளவுக்குமீறி நம்மை அழுத்துகையில் இதயத்தின் ஆழத்திலிருந்து எழும் கதறலையே "விண்ணப்பம்" என்று முன்பு கண்டோம். இங்கே அதைத் தெளிவாகக் காண்கிறோம். தாளமுடியா துக்கம், தாங்கமுடியா பாரம், ஏற்கமுடியா பாத்திரம் வருத்தவே விடுதலைக்காக வீரிட்டார். உடல் பலவீனமும் நரக பயங்கரமும் அவரைக் கதறச் செய்கின்றன. இருப்பினும் இறைவனின் விருப்பத்திற்காக விண்ணப்பிக்கிறார். கீழ்ப்படியும் மனம் கிருபைக்காகக் கெஞ்சுகிறது!

கட்டாயத்திற்காகக் கீழ்ப்படிவது பெருமைக்குரியதல்ல. சூழ்நிலை நெருக்குவதால் வெறுப்புடனும் முறுமுறுப்போடும் நாம் கீழ்ப்படியலாம். அது தற்காலிக சரணாகதிதான். அச்சூழ்நிலை மாறும் போது மனமும் தன்னிச்சைக்குத் திரும்பிவிடும். அதுவல்ல இயேசு செய்தது. இறைவனுடைய முழு விருப்பத்திற்குத் தன்னை விட்டுக் கொடுத்து உண்மையோடும் உத்தமத்தோடும் நம்பிக்கையோடும் கிருபைக்காக வேண்டி நிற்கிறார். இப்படிப்பட்ட விண்ணப்பமே பெரிய காரியங்களைச் செய்யும்.

ஒப்புக்கொடுத்தல் என்பது இறைவனின் விருப்பத்திற்கு, முற்றிலும் விட்டுக்கொடுப்பதே. அவர் விருப்பத்தை விரும்பிச் செய்வதும் அவர் திட்டங்களை தீவிரமுடன் செயலாற்றுவதுமே அது. அதற்குக் கீழ்ப்படிதலும், பொறுமையும், அன்பும் அவசியம். மனமற்ற கீழ்ப்படிதல் ஒப்புக்கொடுத்தலே உண்மையான கீழ்ப்படிதலும் இனிமையும் முழுமையும் கொண்ட வாழ்வினை நமக்குத் தரும்.

கெத்செமனே தோட்டத்தில் மண்டியிட்டு ஏறெடுத்த இயேசுவின் விண்ணப்பத்திலிருந்து நாம் காண்பது: வேதனை, வியாகுலம், தயக்கம், கலக்கம், பாரம். ஆனால் இவை நடுவிலும் இறைவனின் மகிமையே அவரது குறிக்கோளாயிருந்தது. இதைப்போன்ற வேளைகளில் நாம் என்ன செய்வோம்?

மோசே வாக்குப் பண்ணைப்பட்ட கானானுக்குள் நுழைய விண்ணப்பித்தான். தாவீது வியாதிப்பட்ட தன் குழந்தைக்காகவும், எசேக்கியா வாழ்நாட்களுக்காவும் பவுல் தன் சரீர முள்ளுக்காகவும், விண்ணப்பித்ததைப் பார்க்கிறோம். நமது வாழ்விலும், இத்தகைய வேளைகள் வரும்போது கீழ்ப்படிதலுடன் விண்ணப்பம் செய்வோமா?

கெத்செமனேயின் துக்கம், துயரம், தனிமை, வேதனை, வியாகுலம் நம்மைச் சூழும்போது தாழ்மையோடும் கண்ணீரோடும் நாம் கதறவேண்டும். ஆனால் உவகையோடு ஐயமின்றி, விளைவுகளை எண்ணாது நம்மை அவர் கரத்தில் அர்ப்பணிக்கவேண்டும். அப்பொழுது நம் எண்ணத்திற்கும் எட்டாத வழியில் அவர் நமக்கு உதவுவார்.

கிறிஸ்துவின் அனுபவம் அதுதானே. “அவர் மாம்சத்திலிருந்த நாட்களில், தம்மை மரணந்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும் விண்ணப்பம் பண்ணி, வேண்டுதல் செய்து, தமக்கு உண்டான பயபக்தியினிமித்தம் கேட்கப்பட்டு, அவர் குமாரனாயிருந்தும் பட்டபாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு, தாம் பூரணரானபின்பு” (எபி5:7,8,9). “இரட்சிப்பின் அதிபதியை உபத்திரவங்களினாலே பூரணப்படுத்துகிறது அவருக்கேற்றதாயிருந்தது” (எபி 2:10).

கிறிஸ்து ஜெபித்தது விடுதலைக்காக, பெற்ற பதிலோ பூரணம். ஒருவேளை அவருடைய விண்ணப்பத்தைக் கேட்டு பாடுகளைத் தவிர்க்காமல் இருந்து உலகத்தில் அதிபதியோடு தனியாய்ப் போராடவிடாது மனதிற்குத் துன்பத்தைத் தரலாம். ஜெபத்தைக் குறித்து கேள்வியும் எழலாம். அவ்வேளையில் அவருக்கு முழுமையாக ஒப்புக்கொடுத்தல் மேலான பதிலைத் தந்தது. இறைவன் தமது தூதனை அனுப்பி அவரைத் தேற்றியது எதிர்பார்த்ததற்கு மாறாக இருந்தாலும் சிறப்பான பதிலன்றோ?

இங்கே நாம் கவனத்தில் வைக்கவேண்டியது என்னவெனில், விடாப்பிடியான விசுவாச ஜெபத்தை நாம் விட்டுவிடக்கடாது. ஒருமுறை ஜெபித்துவிட்டு இது இறைவனுக்கு விருப்பமில்லை என்று விட்டுவிடக்கூடாது. அது ஜெபத்தின் மகிமையைக் குறைத்து அதின் பேராசீர்வாதங்களைப் பெற மறுக்கும் மாய்மால ஜெபம்.

உறுதியற்ற, ஊக்கமற்ற, தொடரற்ற ஜெபத்தை நாம் அர்ப்பணிப்பின் ஜெபமென்று முலாம் பூசி விடுகிறோம். பலமுறை துவங்க வேண்டிய வேளையிலேயே முடித்து விடுகிறோம். ஜெபத்தைக் கேட்க ஆவலுடன் அவர் செவிமடுக்கும்போது நாம் ஜெபிக்காது இருந்துவிடுகிறோம். ஜெபத்திற்கு வரும் தடைகளினால் சோர்ந்துபோய், தொடர்ந்து ஜெபிக்காமல் இறைவனுடைய திருச்சித்தத்திற்கு விட்டுக் கொடுத்துவிட்டோம் என்று சொல்லிவிடுகிறோம். அற்பவிசுவாசத்திற்கும், ஆவிக்குரிய சோம்பேறித்தனத்திற்கும் ஒப்புக்கொடுத்தலின் ஜெபம் என்று பெயரிட்டு விடுகிறோம். அது முற்றிலும் தவறு. நாம் விரும்பிய

விளைவுகளை எதிர்பாராமல் இறைவனின் விருப்பத்தை நாடி அதைச் செயல்படுத்த விரும்புவதே கிறிஸ்துவைப்போல் ஜெபிப்பதாகும். நாம் அவரிலும் அவர் நம்மிலும் நிலைத்திருக்கையில் அவருடைய விருப்பத்தின்படியே ஜெபிப்போம், விளைவுகளைக் கண்டோம். அவரது சிந்தையே நமதானால் ஐயத்திற்கு இடமில்லை.

“நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படி கேட்டால், அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்பதே அவரைப் பற்றிநாம் கொண்டிருக்கிற தைரியம்” (1யோ5:14). அவருடைய விருப்பத்தின்படி வேண்டிக் கொள்ளும்பொழுது அதைப் பெற்றுக் கொள்வது உறுதி. அவரது வார்த்தைகளே அவரது விருப்பத்தை நமக்கு வெளிப்படுத்தும். “அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொண்டு அவருக்கு முன்பாகப் பிரியமானவைகளைச் செய்கிறபடியினால் நாம் வேண்டிக் கொள்ளுகிறது எதுவோ அதை அவராலே பெற்றுக் கொள்ளுகிறோம்” (1 யோ 3:22).

இறை நோக்கத்தை முதன்மையாக்கி அதை நிறைவேற்ற நாம் விரும்பினால் அவருடைய விருப்பத்தை நம்மால் எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். அவ்வேளையில் நமது விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்று விண்ணப்பம் செய்யமாட்டோம். “நான் இப்பொழுது என் பிதாவை வேண்டிக்கொண்டால், அவர் பன்னிரண்டு லேகியோனுக்கு அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்பமாட்டாரென்று நினைக்கிறாயா? அப்படிச் செய்வேனானால், இவ்விதமாய்ச் சம்பவிக்க வேண்டும் என்கிற வேத வாக்கியங்கள் எப்படி நிறைவேறும்?” (மத் 26: 53,54). இதுவே கிறிஸ்துவின் எடுத்துக்காட்டு.



# 13

# ஆவியைப் பெற ஜெபம்

ஆவியானவரின்றி ஊழியமில்லை. நற்செய்திப் பணிக்கு அவரே நடுநாயகர். ஆவியின் வரத்தைப் பெறும் மட்டும் கிறிஸ்து தமது பணியைத் துவங்காதது அதற்காகவே. நாமும் அவரன்றி ஒன்றும் செய்யக்கூடாது. ஆவியின் வரம் அவர் வாழ்வில் திருப்பத்தை உண்டு பண்ணியது. சபைத் தரித்திரத்தை உருவாக்கியதும் அதுவே.

ஆவியானவரே நமது விளக்கு, வழிகாட்டி, ஆசிரியர், ஆதரவாளர்! இந்த யுகத்தின் தலைவர் அவரே. மாலுமியைப் போல நம்மை நடத்துபவர் அவரே.

நற்செய்தித்திட்டத்தை அமுலாக்கி அதற்கான சக்தியை நமக்குத் தருகிறார். மாபெரும் அற்புதங்கள் செய்ய மட்டுமல்ல, சின்னஞ்சிறு செயல்களைச் செய்யவும் அவர் உதவி நமக்குத்தேவை.

ஆவியானவரே இறைப்பணியின் அதிகாரி. ஆவியின்றி வெறும் அறிவினாலோ, திறமையினாலோ, பேச்சுத் திறனாலோ நற்செய்திப் பணியைச் செய்யமுடியாது. சிறந்த வேத அறிவும்கூட உதவாது. ஆவியானவரின் வரத்தைப் பெறாதவர்களின் செய்திகள் உயிரற்ற, உணர்ச்சியற்ற, அனலற்ற, அர்த்தமற்ற கதையாகக் காணப்படும்.

இயேசுவின் இரத்தம் மட்டும் போதாது. தூதர்களின் உதவியாலும் கூடாது. ஆவியின் அருள்மழையின் நிறைவைப் பெற்றவரே மீட்பின் செய்தியைப் பறைசாற்ற இயலும்.

ஆவியின் வல்லமையால் நிரப்பப்படும்வரை எருசலேமின் வீதிகளில் செத்துக் கொண்டிருந்த மக்கள் கூட்டத்திற்கு பணிசெய்ய சீடர்கள் துணியவில்லை. இயேசுவுக்கு மிகவும் பிரிய சீடன் யோவானும்கூட இயேசு செய்த அற்புதங்களின் ஆழங்களை அறிந்திருந்தும் தூய ஆவியின் அருள்மாரிக்காக காத்திருக்க வேண்டியிருந்தது. தூய ஆவியின் உதவியால் இயேசுவைப் பெற்றெடுத்து, தாலாட்டி, சீராட்டி வளர்த்த மரியாளுக்கும் ஆவியானவரின் வரம் அவசியமாய் இருந்தது.

ஆவியானவரின் வரத்தைப் பெற ஒரே வழி ஜெபம். கேட்பவரே பெற்றுக்கொள்ள முடியும். அதுவே கிறிஸ்துவின் அனுபவம். “கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்” என்பதே அவர் வாக்கு (மத் 7:7). திக்கற்றவர்களாய்த் தவித்த சீடருக்கு அவர் வாக்குப் பண்ணியது, “நான் பிதாவை வேண்டிக் கொள்ளுவேன், அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனேகூட இருக்கும்படிக்குச் சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றரவாளனை அவர் உங்களுக்குத் தந்தருளுவார்” (யோ 14:16). கிறிஸ்துவோடு சீடரும் ஜெபிக்கவேண்டும். இன்றைக்கும் ஆவியின் வரத்தைப் பெறாதவர்களுக்கு அவரது குற்றச்சாட்டு, “நீங்கள் விண்ணப்பம் பண்ணாமலிருக்கிறதினாலே, உங்களுக்குச் சித்திக்கிறதில்லை” (யாக்4:2). சிலர் குறைவாகக் கேட்டதினால் குறைவாகப் பெற்றனர் எனலாம்!

கிருபையே உருவாய்க் கொண்டவர் ஆவியானவர். கனிகள் தர நமக்கு உதவுபவரும் அவரே. கிருபையைப் பெற்றும் கனிதராத வாழ்வு எப்படியிருக்கும்? வரத்திற்காக மட்டுமல்ல, கனிகளுக்காகவும் வேண்டுவோமா?

ஆவியின் வரத்தை நாடுவோம். ஆவியின் அனலைப் பெறுவோம். விசுவாசத்திலும் ஜெபத்திலும் வளர்வோம். எவ்வளவு அதிகமாக ஆவியில்

நிரம்பி, ஆவியில் நடக்கிறோமோ அவ்வளவே நாம் அவருக்காக உழைக்கவும் வாழவும், பிறருக்கு நன்மை செய்யவும் முடியும்.

உலகின் பாவத்தைக் குறித்தும், நியாயத்தீர்ப்பைக் குறித்தும் கண்டித்து உணர்த்துபவர் ஆவியானவரே. பாவிகளின் மனந்திரும்புதலுக்கு ஆவியானவர்தான் உதவுகிறார். இறைவனின் பிள்ளைகளும் கிறிஸ்துவைப் போல மாறவேண்டும். அதற்கு கிருபை அளிப்பவர் ஆவியானவர். அப்படிப்பட்ட சகாயரைப் பெற வழி ஜெபமே. "பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது, பரம பிதாவானவர் தம்மிடத்தில் வேண்டிக் கொள்ளுகிறவர்களுக்குப் பரிசுத்த ஆவியைக் கொடுப்பது அதிக நிச்சயமல்லவா?" (லூக்11:13). இதைக் காட்டிலும் உறுதியான வாக்கு வேண்டுமோ?

பிதாவின் வலது பாரிசத்தில் வீற்றிருக்கும் கிறிஸ்துவினிடத்திலிருந்து ஆவியின் வரத்தைப் பெற்றுக் கொள்ள ஜெபமே நிபந்தனை. திருமறை இதைத் தெளிவாய்க் கூறுகிறது. இறைவனும் கிறிஸ்துவும் இவ்வுலகில் இருப்பது போலவே ஆவியானவரும் இருக்கிறார். அவர்கள் எவ்வாறு செயல்படுகிறார்களோ அவ்வாறே இவரும் செயல்படுகிறார். பெந்தேகொஸ்தே நாளுக்கு முன்னர் செயலாற்றியவர் அவரே. ஆவிக்குரிய நன்மைகள் அனைத்தும் அவரைக் கொண்டே பெற முடியும். எனவே இறைவனை கிறிஸ்துவை எப்படித் தேடுகிறோமோ அவ்வண்ணமே ஆவியின் வரத்தையும் நாட வேண்டும். ஆவியின் வல்லமைக்காய், வரங்களுக்காய், கனிகளுக்காய் நாம் விண்ணப்பம் செய்யவேண்டும்.

ஆவியின் வரத்தைப் பெற ஜெபமே நிபந்தனை. கிறிஸ்துவும் திருமுழுக்குப் பெறுகையில் ஆவியின் வரத்திற்காக ஜெபித்தார். அப்போஸ்தலரும் அவ்வண்ணமே ஜெபித்தனர்.

பெந்தெகொஸ்தே நாளுக்குப் பின்னர் சீடர் ஜெபிப்பதைப் பார்க்கிறோம். "அவர்கள் ஜெபம் பண்ணினபோது, அவர்கள் கூடியிருந்த இடம் அசைந்தது. அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினால்

நிரப்பப்பட்டு, தேவ வசனத்தைத் தைரியமாய்ச் சொன்னார்கள்" (அப் 4:31). இதிலிருந்து ஜெபமே ஆவியின் வரத்தைப் பெறுவதற்கும், மறுபடி ஆவியில் நிறையவும் வழி என்பதைக் காண்கிறோம். இறைவன் பெரிய காரியங்களைச் செய்வதும், வல்லமையும், வரங்களையும் அளிப்பதும் ஜெபத்தின் மூலமே என்பதை இது தெளிவுபடுத்துகிறது.

பிலிப்பு மூலம் கிறிஸ்துவைக் கண்டுகொண்ட சமாரியர் களி கூர்ந்தனர், திருமுழுக்குப் பெற்றனர். ஆனால் பேதுருவும் யோவானும் ஜெபிக்குமட்டும் அவர்கள் ஆவியின் வரத்தைப் பெறவில்லை. ஜெபத்தினால்தான் ஆவியின் வரத்தைப் பெறமுடியும் என்பதை இது வலியுறுத்துகிறது.

பவுல் ஜெபிக்கிறான் என்பதே அவன் ஆவியின் வரத்தைப் பெறுவான் என்று அனனியாவுக்கு ஆண்டவர் கொடுத்த அடையாளம்.

ஆவியானவரே நம்மை ஜெபிக்கத் தூண்டி நமக்கு எட்டாதவைகளை வெளிப்படுத்துகிறவர். இறைவனின் விருப்பத்தை நிறைவேற்ற நம்மில் செயல்படுபவரும் அவரே. அவர் எவ்வளவு அதிகம் நம்மை ஆட்கொள்கிறாரோ அவ்வளவே நமது ஜெபத்தில் வல்லமை இருக்கும். எபேசியருக்குப் பவுல் எழுதிய நிருபம் மூன்றாம் அத்தியாயத்தில் சபைக்காக அவன் மன்றாடுகிறான். அந்த அற்புத மன்றாட்டு இறைவனின் கொடுக்கும் திறனை மீறிவிட்டதென எபேசியர் எண்ணாதிருக்க "நாம் வேண்டிக் கொள்ளுகிறதற்கும் நினைக்கிறதற்கும் மிகவும் அதிகமாய் நமக்குள்ளே கிரியைசெய்கிற வல்லமையின்படியே, நமக்குச் செய்ய வல்லவர்" என்று கூறி முடிக்கிறான் (வச 20). நம்மில் எவ்வளவாய் அவர் செயல்படுகிறாரோ அவ்வளவே அவரது வல்லமை வெளிப்படும். ஆவியானவரின் செயல் நம்மில் இல்லாததே நமது ஜெபமின்மைக்குக் காரணம். அவருடைய ஆவியின் வல்லமை இல்லாதிருப்பதாலேயே பலர் ஜெபிப்பதில் குறைவுபட்டுள்ளனர்.

ஆவியில் எவ்வளவு நிறைந்திருக்கிறோமோ அவ்வளவே ஜெபத்தின் மகிமையைக் காண முடியும். நம்மிலிருந்து வெளிப்படும் ஜெபமே நம்மிலிருக்கும் ஆவியின் அளவைக் குறிக்கும். ஆவியில் நிறைந்து

ஏறெடுக்கப்படும் வேண்டுதல் வல்ல செயல்களைச் செய்யும். எலியா அதற்கோர் எடுத்துக்காட்டு, "நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது" (யாக் 5:16).

நாம் ஊக்கமாக ஜெபிக்க நமக்குள் ஆவியானவர் வல்மையாகச் செயல்படவேண்டும். ஆவியில் ஊறாத ஊழியம் வீண். ஆவியின்றி நாம் பண்ணும் ஜெபங்களும் செயல்களும் பயனற்றவை. பவுலின் கற்பனை : "நான் எனக்குள்ளே வல்லமையாய்க் கிரியை நடப்பிக்கிற அவருடைய பலத்தின்படி போராடிப் பிரயாசப்படுகிறேன்" (கொலோ 1:29).

யோவான் 14:16 இல் ஆவியின் வரத்திற்காக இயேசு ஏறெடுத்த ஜெபத்தில் அதிமுக்கிய பாடமொன்றைக் கற்கிறோம். அதில் என்றென்றும் சீடருடன் தங்கிருக்கும் தேற்றரவாளனுக்காக ஜெபிக்கிறார். அது மனந்திரும்பி அவரது பிள்ளைகளாகும்படி ஆவியானவரின் செயலையல்ல, பிள்ளைகளோடு மகிமையோடும் வரங்களோடும் வந்து தங்கியிருப்பதையே குறிக்கிறது. மனந்திரும்பச் செய்வதும், தங்கியிருப்பதும் இரு தனி அனுபவங்கள். இரண்டாவதில் ஆவியின் வரங்களும், வல்லமையும் பெரிதாக வெளிப்படுகிறது. முதலாவது நம்மைக் கிறிஸ்துவுக்குச் சொந்தமாக்கி நம்மை அவரது அவயவங்களாக்குவது. இரண்டாவது அவரது ஆளுகையால் நமது அவயவங்களில் அவரின் வல்லமையையும் வரங்களையும் வெளிப்படச் செய்வது.

மலைப் பிரசங்கத்தில் இயேசு சொன்னது: "பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது, பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதா தம்மிடத்தில் வேண்டிக் கொள்ளுகிறவர்களுக்கு நன்மையானவைகளைக் கொடுப்பது அதிக நிச்சயமல்லவா?" (மத் 7:11). "நன்மையானவைகள்" என்பதற்குப் பதிலாக லூக்கா "பரிசுத்த ஆவி" என்று குறிப்பிடுகிறான் (11:13). ஆவியானவரே எல்லா நன்மைகளின் மொத்த உருவம்.

ஆவியின் வரத்தைப் பெற சில போதகர் பல நிபந்தனைகளைக் கூறுகின்றனர். குழப்பத்தில் ஆழ்த்தியும் விடுகின்றனர். ஆனால் நமது

கர்த்தரின் நிபந்தனை கேட்பதே. அது எத்தனை, எளிமை, ஆனால் தெளிவு! தீவிரமாக, விடாப்பிடியாக அவரைப் பெறும் வரை கேட்கவேண்டும், தேடவேண்டும், தட்டவேண்டும். கேட்கிற எவனும் பெற்றுக் கொள்ளுகிறான். பிள்ளையின் அத்தியாவசியத்தேவைக்குப் பிதாவின் மிகச்சிறந்த ஈவாகிய, ஆவியானவரைத் தேடிப் பொறுமையுடன் கேட்கவேண்டும். கர்த்தருக்குக் காத்திருப்போர் வெட்கப்பட்டுப் போவதில்லை.

வாக்குப் பண்ணப்பட்ட ஈவாகிய ஆவியானவரைப் பெறுவது எப்படி? நம்பிக்கையுடன், ஐயமின்றி, பயமின்றி, அமைதியாக, அமரிக்கையாக, தீவிரமாக, விடாப்பிடியாக ஜெபத்திலே தரித்திருக்க வேண்டும். பூவுலகப் பெற்றோர் அறியாத தாராளத்தோடு, உவகையுடன், அதிகமதிகமாய் அள்ளித்தரும் பரமபிதாவிடம் குழந்தையின் எளிமையோடு காத்திருந்து ஜெபிக்கவேண்டும். பரலோகத்தின் பலகணிகள் திறக்கும்.

“கேளுங்கள், தட்டுங்கள், தேடுங்கள்” என்பது விடாமுயற்சியைக் குறிக்கும். விடாப்பிடியுடன் ஜெபத்தின் மேல் மட்டத்திற்கு ஏறி, மன்றாட்டின் மாண்பைக் காணும்போது ஜெபத்திற்கான பதில் தடைபடமுடியாது என்று அறுதியிட்டுக் கூறுகிறார். நாம் கேட்பதை, தேடுவதை, தட்டுவதைப் பெறத் தவறினால் நட்சத்திரங்களும் ஒளி மங்கிப் போகும்!

தெரிந்தெடுக்கப்பட்டவர்களுக்கல்ல இந்த சிலாக்கியம். இடைவிடாமல் சோர்ந்துபோகாமல், மனந்தளராமல் வேண்டுபவர்களுக்கே! “கேட்கிறவன் எவனும் பெற்றுக் கொள்ளுகிறான்; தேடுகிறவன் கண்டடைகிறான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்” (மத் 7:8). இதைவிட மேலான வாக்கு வேண்டுமோ?



# 14

# ஆவியில் ஜெபம்

ஜெபிக்க ஆவியானவர் உதவுகிறார் என்கிறது வேதம். இயேசுவின் வாழ்விலிருந்து இதோ ஓர் எடுத்துக்காட்டு: “அந்த வேளையில் இயேசு ஆவியிலே களிகூர்ந்து : பிதாவே! வானத்துக்கும் பூமிக்கும் ஆண்டவரே! இவைகளை நீர் ஞானிகளுக்கும் கல்விமான்களுக்கும் மறைத்து, பாலகருக்கு வெளிப்படுத்தின படியால் உம்மை ஸ்தோத்திரிக்கிறேன்; ஆம், பிதாவே! இப்படிச் செய்வது உம்முடைய திருவுளத்திற்குப் பிரியமாயிருந்தது” (லூக். 10:21).

இங்கே இறைவனுக்கும் நமக்கும் உள்ள உறவைக் காண்கிறோம். குழந்தையுள்ளமே தந்தையை அறியவும் புரிந்துகொள்ளவும் முடியும். குமாரன் மூலமே பிதாவானவர் நமது ஜெபங்களுக்குப் பதிலளிக்கிறார். எல்லாவற்றிற்கும் மேலாக ஜெபத்தின் மூலம் அவரையே அடைகிறோம்.

மற்றொரு மொழிபெயர்ப்பு, “இயேசு பரிசுத்த ஆவியிலே களிகூர்ந்து” என்று கூறுகிறது. இதனால் இயேசுகிறிஸ்து வாழ்ந்தது, மகிழ்ந்தது, ஜெபித்தது, பணிசெய்தது எல்லாம் ஆவியானவரின் ஏவுதலினால், வழிநடத்துதலினால்தான் என்பதை அறிகிறோம்.

“அந்தப்படியே ஆவியானவரும் நமது பலவீனங்களில் நமக்கு உதவிசெய்கிறார். நாம் ஏற்றபடி வேண்டிக்கொள்ள வேண்டிய தின்னதென்று அறியாமலிருக்கிறபடியால், ஆவியானவர் தாமே வாக்குக்கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார்” (ரோ 8:26). பொறுமையும் நம்பிக்கையும் ஜெபிக்க அவசியம். ஆனால் ஆவியானவரின் உதவியோ அத்தியாவசியம். இருண்ட இவ்வுலகத்தில் மருண்டு போயிருக்கும் நாம் பரத்துக்கடுத்தவைகளை அறியோம். இருப்பினும் ஜெபிக்கவேண்டியது நமது கடன். அதை நிறைவேற்ற விருப்பமோ, வல்லமையோ நமக்கில்லை. அதற்குத் தேவையான ஞானத்தையும், பெலத்தையும் ஆவியானவர்தான் அருளுகிறார். அவரே ஜெபத்திற்கு உயிரும், உவகையும், உணர்வும் தந்து நமக்குள்ளிருந்து நமக்காக வேண்டுகிறார். அவ்வித ஜெபமே இறைவனுக்கு ஏற்றதாக இருக்கும்.

“நாம் எதையாகிலும் அவருடைய சித்தத்தின்படி கேட்டால், அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்பதே அவரைப் பற்றி நாம் கொண்டிருக்கிற தைரியம்” என்ற வாக்கின்படி நாம் அவருடைய விருப்பத்திற்கேற்ப வேண்டுதல் செய்யும்போது தைரியமாய் அவரைக் கிட்டிச் சேரமுடியும் (1 யோ 5:14). அவருடைய எண்ணம், தூய்மைக்கேற்ப வேண்டுதல் செய்வதே அவர் விருப்பத்தின்படி செய்வதாம். அவரது விருப்பத்தை வேதத்தின் மூலம் அறியலாம். ஆனால் குறிப்பிட்ட சூழலில் அவரது சிந்தையை வெளிப்படுத்துபவர் ஆவியானவரே. “ஆவியானவர்தாமே வாக்குக்கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார். ஆவியானவர் தேவனுடைய சித்தத்தின்படியே பரிசுத்தவான்களுக்காக வேண்டுதல் செய்கிறபடியால், இருதயங்களை ஆராய்ந்து பார்க்கிறவர் ஆவியின் சிந்தை இன்னதென்று அறிவார்” (ரோமர் 8:26,27).

பவுல் இதைக் குறித்து இன்னும் தெளிவாக 1 கொரி 2:9-16இல் கூறுகிறான். “எழுதியிருக்கிறபடி : தேவன் தம்மில் அன்பு கூருகிறவர்களுக்கு ஆயத்தம் பண்ணினவைகளைக் கண் காணவுமில்லை, காது கேட்கவுமில்லை. அவைகள் மனிதனுடைய இருதயத்தில் தோன்றவுமில்லை; நமக்கோ தேவன் அலைவகளைத் தமது ஆவியினாலே

வெளிப்படுத்தினார்; அந்த ஆவியானவர் எல்லாவற்றையும், தேவனுடைய ஆழங்களையும், ஆராய்ந்திருக்கிறார். மனிதனிலுள்ள ஆவியேயன்றி மனிதரில் எவன் மனிதருக்குரியவைகளை அறிவான்? அப்படிப்போல, தேவனுடைய ஆவியேயன்றி, ஒருவனும் தேவனுக்குரியவைகளை அறியமாட்டான். நாங்களோ உலகத்தின் ஆவியைப் பெறாமல், தேவனால் எங்களுக்கு அருளப்பட்டவைகளை அறியும்படிக்குத் தேவனிலிருந்து புறப்படுகிற ஆவியையே பெற்றோம். அவைகளை நாங்கள் மனுஷஞானம் போதிக்கிற வார்த்தைகளாலே பேசாமல், பரிசுத்த ஆவி போதிக்கிற வார்த்தைகளாலே பேசி ஆவிக்குரியவைகளை ஆவிக்குரியவைகளோடே சம்பந்தப்படுத்திக் காண்பிக்கிறோம். ஜென்ம சுபாவமான மனிதனோ தேவனுடைய ஆவிக்குரியவைகளை பெற்றுக் கொள்ளான்; அவைகள் அவனுக்குப் பைத்தியமாகத் தோன்றும்; அவைகள் ஆவிக்கேற்ற பிரகாரமாய் ஆராய்ந்து நிதானிக்கப் படுகிறவைகளானதால் அவைகளை அறியவுமாட்டான். ஆவிக்குரியவன் எல்லாவற்றையும் ஆராய்ந்து நிதானிக்கிறான்; ஆனாலும் அவன் மற்றொருவனாலும் ஆராய்ந்து நிதானிக்கப்படான். கர்த்தருக்குப் போதிக்கத்தக்கதாக அவருடைய சிந்தையை அறிந்தவன் யார்? எங்களுக்கோ கிறிஸ்துவின் சிந்தை உண்டாயிருக்கிறது."

ஆவியானவரின் சிந்தையை ஆண்டவர் அறிகிறார். ஆண்டவருடைய ஏக்கத்தை ஆவியானவர் நமக்கு வெளிப்படுத்துகிறார். ஆவியிலே நிறைந்து, அவர் நமக்கு ஆண்டவருடைய விருப்பத்தை வெளிப்படுத்தினபடியே வேண்டிக் கொள்வோமானால், நாம் கேட்டவைகளைப் பெற்றுக் கொண்டோம் என்று நிச்சயித்துக் கொள்ள முடியும்.

உலகத்தான் தனது விருப்பத்தை நிறைவேற்றவே வேண்டுகிறான். அவனது கவலை, கண்ணீர், வேண்டுதல் யாவும் தன்னுடையவை களுக்காகவும், தனக்காகவுமே இருக்கும். அது ஆவியானவரால் உண்டானதல்ல. ஆனால் ஆவியானவர் நம் மூலம் ஜெபிக்கும்போது இறைவனுடைய விருப்பத்திற்கேற்ப நம்மை மாற்றி பெருமூச்சுகளோடு ஜெபிக்க நமக்கு உதவுகிறார். அப்பொழுது கிறிஸ்துவைப் போல சிந்திப்போம், ஜெபிப்போம். அவருடைய எண்ணங்கள், நோக்கங்கள், விருப்பங்கள் நமதாகும்.

இது புதிய வேதமன்று. நாம் ஏற்கனவே வைத்திருக்கும் வேதத்தை ஆவியானவரின் உதவியால் புரிந்துகொள்ளுகிறோம், அவ்வளவுதான். புதிய வெளிப்பாடுகள் அல்ல, ஏற்கனவே வெளிப்படுத்தியவைகளை ஏற்ற சமயத்தில் ஆவியானவர் பயன்படுத்துகிறார். பிதாவின் வலது பாரிசத்தில் வீற்றிருந்து பரிந்துபேசும் இயேசுகிறிஸ்துவைப் போல நாமும் பரிந்துபேச ஆவியானவர் வேத வார்த்தைகால் வெளிச்சம் தந்து, நமக்குப்போதிக்கிறார்.

மன்றாட்டு எப்படி இருக்கவேண்டும் என்பதை நாம் அறியாதிருப்பதால் ஆவியானவர் நமக்கு உதவுகிறார். மன்றாட்டின் மேன்மையை, அதன் தெய்வீகத்தை நாம் சரியாகப் புரியாதிருப்பதால் அவரே நமக்குள்ளிருந்து பெருமூச்சுகளோடு மன்றாடுகிறார். உலகத்தின் பாவக்கோரத்தை, அழிவின் நெருக்கத்தை நமக்கு உணர்த்தி, தொய்ந்து போனவர்களும், சிதறப்பட்டவர்களுமாயிருக்கிற மக்களுக்காக மன்றாட நமக்கு உதவி செய்கிறார்.

ஆவியில் நிறைந்து மன்றாடும்போது அந்த மன்றாட்டு எத்தனை ஆழமாயிருக்கிறது! ஆவியில்லாத ஜெபம் எத்தனை உயிரற்றதாக, உணர்வற்றதாக இருக்கிறது! அலங்கார அடுக்கு மொழியாக இருக்கலாம் அவை. ஆனால் அவை இறைவனுக்கு முன்பாக வீணே.

சோர்ந்து போகாமல் நாம் ஜெபிக்கையில் ஆவியானவர் வல்லமையாய் செயல்பட்டு ஜெபத்தில் மேன்மையடைய நமக்கு உதவுவார்.

பலமுறை நாம் உரத்தசத்தத்தோடும் வீறாப்போடும் விண்ணப்பம் செய்யலாம். அவை இறைவனால் உண்டாகாமல் நமது மாம்சத்திலிருந்து உண்டானவையே. பல வேளைகளில் வழக்கத்தின் படி ஜெபிக்கிறோம். ஜெபிக்கிற பழக்கம் உத்தமம். ஆனால் அது வெறும் வழக்கமாகிவிடக் கூடாது. அப்படியானால் அது நமது ஜெபவாழ்வைப் பாதித்து போலியான காலி வாழ்க்கையையே தரும். பழக்கம் என்னும் நதிக்கரைகளின் நடுவில் உயிரூட்டும், தூய, ஆழ, வல்ல ஜெபமென்னும் வெள்ளப்பெருக்கு புரள வேண்டும். அன்னாள் வழக்கமாக ஜெபித்தாள்

என்றாலும் தனது இருதயத்தை ஊற்றினாள் என்று பார்க்கிறோம் (1 சாமு 1:7,10,12,13). அவ்வாறே நமது ஜெபமும் வெறும் வழக்கமாயல்ல, வெள்ளப் பெருக்காக இருக்கவேண்டும்.

இயேசு ஜெபத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. ஆவியானவரோ ஓர் உதவி. அவரே நம்மை ஜெபிக்கத் தூண்டுகிறவர். அவர் துவங்கிய, அவரால் தூண்டப்பட்ட ஜெபமே இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படும். "பரிசுத்த ஆவிக்குள் ஜெபம் பண்ணுங்கள்" (யூதா 20). "எந்தச் சமயத்திலும் சகலவிதமான வேண்டுதலோடும் விண்ணப்பத்தோடும் ஆவியினாலே ஜெபம் பண்ணி" என்று வேதம் சொல்லுகிறது (எபே 6:18) அவர் வாக்கே நமக்கு ஆறுதல். "அந்தப் படியே ஆவியானவரும் நமது பெலவீனங்களில் நமக்கு உதவி செய்கிறார். நாம் ஏற்றபடி வேண்டிக் கொள்ள வேண்டியதின்னதென்று அறியாமலிருக்கிறபடியால், ஆவியானவர் தாமே வாக்குக் கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார். ஆவியானவர் தேவனுடைய சித்தத்தின்படியே பரிசுத்தவான்களுக்காக வேண்டுதல் செய்கிறபடியால், இருதயங்களை ஆராய்ந்து பார்க்கிறவர் ஆவியின் சிந்தை இன்னதென்று அறிவார்" (ரோமர் 8:26,27).

ஜெபத்தைக் குறித்து நாம் அறியவேண்டியது கடலளவு. நமது போதகர்கள் கற்றுக் கொடுத்ததோ கையளவு. தாயார் சொல்லிக் கொடுத்த ஜெபம் மிக அருமையானது. அதை நம்மால் மறக்க முடியாது. ஆனால் அன்புத் தாயின் எளிய ஜெபம் இந்த இருண்ட காலத்துப் போராட்ட வாழ்விற்குப் போதாது. அவை துவக்கப் பாடங்கள். ஆனால் தேர்ச்சியடைய ஆவியானவரின் உதவி அவசியம். அவரே அதன் மேன்மைக்கு நம்மை நடத்துபவர். முழு இருதயத்தோடும் முழு மனதோடும் முழு பெலத்தோடும் ஜெபிப்பதே கிறிஸ்தவ போராட்டத்தின் பெருஞ்சாதனை. இதைக் கற்றுக் கொடுப்பதும், தொடர்ந்து செய்ய உதவி செய்வதும் ஆவியானவரே. எவனும் இயேசுவைக் கிறிஸ்து என்று அறிக்கையிடுவதும் இரட்சிக்கப்படுவதும் ஆவியானவராலேயே.

ஆவியானவர் நம்முடன் இருப்பது அவசியம். அவர் இவ்வுலக ஆசிரியரைப் போல வெறுமனே கற்றுக்கொடுக்காமல் கூடவே இருந்து

செயலாக்கவும் உதவி செய்கிறார். பாடத்தையல்ல அவரையே பற்றிக் கொள்ளுகிறோம். அவர் நம்மோடிருந்து நம்மைத் தூண்டி, விளங்கச்செய்து ஜெபிக்க உதவுகிறார். அவரே விருப்பத்தைத் தந்து அனல்மூட்டுகிறவர். அவரது பெருமூச்சுகளுக்கு நமது உதடுகளைத் தருகிறோம். அவ்வளவுதான். அவரது மன்றாட்டுகளே நமது ஜெபத்திற்கு வல்லமையை, மகிமையைத் தரும். அவர் நமக்காக, நம் மூலம், நம்மிலிருந்து வேண்டுகிறார். நாம் அவரால், அவர் மூலம், அவரில் ஜெபிக்கிறோம். ஜெபம் அவருடையது, வார்த்தைகள் நம்முடையவை.

ஆவியானவர் நமக்கு உதவி செய்யும்போது நமது ஜெபம் இறைவனின் விருப்பத்தின்படியே இருக்கும். ஏனெனில் அவர் இறைவனின் விருப்பத்தின்படியே எப்போதும் ஜெபிக்கிறார். நமது ஜெபங்கள் அவரது விருப்பத்தின்படி இல்லாவிட்டால் ஆவியானவர் அவைகளுக்கு உதவமாட்டார். ஆவியானவர் வாசம் செய்யும் உள்ளத்தில் இறைவன் விரும்பாத விண்ணப்பம் எழமுடியாது.

யூதா சொன்னதுபோல் நாம் ஆவியில் ஜெபிக்கவேண்டும். பவுல் சொல்வது போல எல்லா ஜெபங்களையும் விண்ணப்பங்களையும் ஆவியில் ஏறெடுக்க வேண்டும். ஆவியானவர் நமது பலவீனங்களில் உதவி செய்கிறார். நாம் ஏற்றபடி வேண்டிக் கொள்ள வேண்டியதின்னதென்று அறியாமலிருக்கிறபடியால் அவர்தாமே வாக்குக்கடங்காத பெருமூச்சுகளோடு நமக்காக வேண்டுதல் செய்கிறார் என்பதை மறந்துவிடக்கூடாது.

எல்லாவற்றுக்கும் மேலாக நமது எல்லா ஜெபங்களும் கிறிஸ்துவின் பெயரால் ஏறெடுக்கப்பட வேண்டும். அதுவே அவருடைய இரத்தத்தின் வல்லமையையும், மன்றாட்டின் மேன்மையையும், அதிகாரத்தின் முழுமையையும் குறிக்கும். “என் நாமத்தினாலே நீங்கள் எதைக் கேட்டாலும் அதை நான் செய்வேன்” (யோ14:14). இதுவே ஜெபத்திற்கடுத்த அதிமுக்கிய வாக்கு.

